

நாட்டில் பிறந்தவர் நாரணற்கு ஆள்இன்றி ஆவரோ
நாட்டில் பிறந்து படாதனபட்டு மனிசர்க்கா
நாட்டை நலியும் அரக்கரை நாடித் தடிந்திட்டு
நாட்டை அளித்து உய்யச்செய்து நடந்தமை கேட்டுமே.

[தன் வாசியறியாத இக்கொடிய உலகத்திலே வந்து பிறந்து, மனிதர்களும் அனுபவிக்காத துன்பங்களை அனுபவித்து, செய்நன்றி அறியாத மனிதர்களுக்காக, உலகத்தைத் துன்புறுத்துகின்ற ராவணன் உள்ளிட்ட அரக்கர்களை தேடிச்சென்று கொன்று, (இவ்வகையில்) நாட்டைக் காப்பாற்றி, நல்வழியில் நெறிபடுத்தி, பிறகு திருநாட்டுக்கு நடந்த செய்தியை கேட்டபின்பும் (அப்பெருமானுடைய திக்குணங்கள் நடையாடுகிற) மண்ணிலே பிறந்தவர்கள் நாராயணனான அந்த ஸ்ரீராமனுக்கு அன்றி மற்றவர்களுக்கு அடிமையாவார்களோ (ஆகமாட்டார்கள்).

(திருவாய்மொழி - 7-5-2)



# ஸப்தகிரி

ஏப்ரல் - 1994


தனிப்பிரதி ரூ. 2 — மலர் 24

வருடச்சந்தா ரூ. 24 — இதழ் 11



சிறப்பாசிரியர் :

திரு. டி.வி.எஸ்.என். மூர்த்தி, ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.,

துணையாசிரியர்:

திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஸ்ரீராமபட்டாபிஷேகம் - தஞ்சை ஓவியம்.

பின்னட்டை : வெள்ளித்தேர்-வசந்தோத்ஸவம் திருமலை.

முதல் உள்ளட்டை : ஸ்ரீகோதண்டராமசுவாமி கோயில் திருப்பதி.

2வது உள்ளட்டை : ஸ்ரீவேதநாராயணசுவாமி கோயில்-பிரம்மோத்ஸவம் - நாகலாபுரம்.

JAGADISH

# உங்களுடன்....

மனிதன் தன்னைத் தானே தவறாக எடைபோட்டுக்கொள்வதால்தான் ஏமாற்றங்களுக்கும் குழப்பங்களுக்கும் உள்ளாகின்றான். உண்மை வாழ்க்கையைப் புரிந்து கொள்ள முனையாமல், சுயநல நோக்கத்தோடு, கற்பனை வாழ்க்கையில் தன் நேரத்தையும், உழைப்பையும் பலியிடுவதால், தன்னம்பிக்கை இழந்தவனாக - சிந்திக்கத் தவறியவனாக மனிதன் பல நேரங்களில் திகழுகின்றான். இதனால் சிறு சிறு பிரச்னைகளும் பூதாகரமாக அவனுக்குத் தென்படுகின்றன. விளைவு! சோகமும், சோம்பலும்தான் அவன் எதிர்கொள்ளும் பயன்களாக அமைகின்றன. இவற்றிலிருந்து அவன் விடுபட்டு வெற்றிபெற வேண்டுமென்றால் அது அவன் அனுபவத்தினால் மட்டுமே முடியும். அதற்காக அவன் தன் வாழ்நாளையே அர்ப்பணிக்க வேண்டிவரும். அதுபோது 'வாழ்க்கையில் வெற்றி' என்பது ஒரு கனவாகவே - சோகமாகவே அமைந்துவிடும். இந்நிலையில் அவனுக்கு உதவுவது யார்? எது? முன்னோர்கள் இம்மண்ணிற்கு விட்டுச் சென்ற புராணங்கள், இதிஹாஸங்கள் மற்றைய சமயஇலக்கியங்கள்தாம். புராணங்கள் புளுகு மூட்டைகள் என்றும், இதிஹாஸங்கள் இளித்தவாயர்களுக்கு என்றும், மொத்தத்தில் சமயங்கள் சந்தர்ப்பவாதிகளின் வாகனங்கள் என்றும் கூறிக்கொள்வதால் ஒருசிலர் தங்களை அறிவுஜீவிகளாக - பகுத்தறிவு பாசறைகளாகக் காட்டிக்கொண்டாலும், இறுதியில் அவர்கள்தம் 'இயக்கத்தினை' தங்களுடைய 'பிழைப்புக்கு' ஒரு வழியாகக் கொண்டார்களே தவிர, அவர்கள்தம் முயற்சிகள் வெற்றி பெறவில்லை. சமயம் எனும் போது அவர்களுக்கு 'இந்து சமயம்' என்பது மட்டுமே அவர்களது இலக்காக அமைந்திட்டபோது, அவர்களது கொள்கைகள் 'பிழைப்புக்காக மட்டுமே' என்பது உறுதியானது. ஆனால் இந்து சமயத்திற்கு எதிரிகள் இப்'பிழைப்பாளர்'களால் அல்ல. சமயத்தை ஒரு சடங்காகக் கொண்டு, பொழுதுபோக்காகக் கொண்டு, சமயத்தின் அடிப்படை இலட்சியம் என்ன, சமய விழாக்களை ஏன் கொண்டாடுகிறோம் என்பதை ஒருகணமேனும் சிந்திக்கத் தவறிய இந்துக்களால்தான் அச்சமயத்திற்குக் கேடு என்பதே கசப்பான உண்மையாகும். தனி மனிதனின் உடலும், உள்ளமும் தூய்மையாக விளங்கிடின், ஊரும், உலகமும் தானாகவே செம்மையுறும் என்பதே இந்து சயத்தின் அசைக்கமுடியாத கொள்கையாகும். தனிமனித உயர்வே சமுதாய உயர்வுக்கு வழிகாட்டும் என்பதே அச்சமயத்தின் பெருநோக்கமாகும். இதனை அறிவுறுத்தத்தான் சமய இலக்கியங்கள் உருவாகின.

இந்து சமயத்தின் இரு கண்களாக விளங்குவன. இராமனைத் தலைவனாகக் கொண்ட இராமாயணமும், கண்ணனை நாயகனாகக் கொண்ட மகாபாரதமும் ஆகும். தர்மம் நிலை குலையும் போதெல்லாம், அதர்மத்தை அழித்து அறத்தைக் காத்திட இறைவன் இம்மண்ணில் பிறவி எடுக்கின்றான் என்ற இந்து சமய உண்மையை உணர்த்திடத் திரேதாயுகத்து இராமனும், துவாபரயுகத்துக் கிருஷ்ணனும் இம்மண்ணில் வந்துதித்தனர். நவமியும், அஷ்டமியும் நன்னாளன்று என்றும், அன்று பிறந்தவர்கள் துன்பத்திற்கு ஆளாவார்கள் என்றும், அன்று தொடங்கிய பணிகள் பிரச்சனைக்குள்ளாகும் என்றும் பலர் தலைமுறையாகக் கூறி வந்தாலும் அந்நாட்களில் முறையே இராமனும், கண்ணனும் தோன்றி 'நாள் என்ன செய்யும், கோள் என்ன செய்யும் கொண்ட கொள்கை உன்னதமாயின், வாழும் வாழ்க்கை நேர்மையாயின்' என்பதைச் சொல்லாமற் சொல்லி, சொல்லியதை வாழ்ந்து காட்டி, மானிட சமுதாயம் உயர்ந்திட வழிகாட்டினர்.

தனிமனித உயர்வுக்குத் தாஸரதி ஒரு முன்னுதாரணமாகத் திகழ்ந்திட்ட போது சமுதாய உயர்வுக்குப் பார்த்தசாரதி ஒரு வழிகாட்டியாக விளங்கினான் என்றே கூறவேண்டும். தீமைகள் நிறைந்த மண்ணுகத் திரேதாயுகம் விளங்கிடவில்லை. மக்கள் எல்லாம் பெற்று

எங்கும் மகிழ்ச்சியுடனே இருந்தனர். தீயோரை விரல்விட்டு எண்ணிவிடலாம். வஞ்சம் கொஞ்சமாகத்தான் இருந்தது. அரச குடும்பத்தில் பிறந்த காகுத்தன், பதினான்கு ஆண்டுகள் மட்டுமே, அதுவும் இறுதி ஆண்டுமட்டுமே அதிகமாகத் துன்பப்பட நேர்ந்தது. உதவிட பலரும் பக்கத்திலிருந்தனர். இராமன் தன் மரணத்தைத் தானே நிச்சயித்தான். இவ்வகையில் இராமனின் துன்பம் , தனிப்பட்ட ஒரு மனிதனைச் சார்ந்த பிரச்சனையாகத்தான் கருத வேண்டியிருந்தது. ஆனால் மாயவனோ பிறந்ததுமுதல் இறப்பு வரை பிரச்சனையோடு போராட வேண்டியிருந்தது. சிறையில் பிறந்து, இரவில் கடத்தப்பட்டு, ஒளிந்து வாழும் நிலையில் கண்ணன் தன் பாலபருவத்தை அனுபவிக்க வேண்டியிருந்தது. வாழ்நாளில் தன் எதிரிகளின் கொலை முயற்சிகளிலிருந்து தன்னையும், தன்னை நம்பியோரையும் காத்துக் கொள்வதிலும் அறத்திற்குக் கேடு நேரும் போதெல்லாம் தன் அறிவாலும், ஆற்றலாலும் நல்லோரைக் காப்பதிலும் தன் வாழ்நாளை அர்ப்பணித்துக் கொண்ட வள்ளலாக, கர்ம வீரனாகக் கோகுல நாயகன் விளங்கினான். தியாகமும், சேவையும் கண்ணனது வாழ்நாள் பணிகளாக அமைந்தன. அவனால் உயர்ந்தோர், உய்வு பெற்றோர் பலர். அதனால்தான் மற்றவர் பிரச்னைகளைத் தன்பிரச்னையாகக் கொண்டு மக்கள் தலைவனாகக் கண்ணன் விளங்கினான்.

கருவிலிருந்து உருவானவர்கள் அல்ல, சீதையும் திரௌபதியும், ஆனால் இருவருமே இருவேறு யுக தர்மங்களை - வாழ்க்கை நிலையினைப் படம் பிடித்துக் காட்டும் பாத்திரங்களாகத் திகழ்கின்றனர். கணவன் அருகு இல்லாத நேரத்தில், மனிதர்கள் இல்லாத காட்டில், வஞ்சகமாக எதிரி ஒருவனால் எடுத்துப் போகப்பட்டு, சிறையிருந்த செல்வியாக பலநாட்கள் இருந்தாலும் அவனாலும் தீண்டப்படாத வகையில் விளங்கி, மீட்கப்பட்டபின், பாமரன் ஒருவன் சொல்லுக்காக, தீயினில் குளித்துத் தூய்மைச் சுடராக, திரேதாயுகத்து ஜானகி ஒளிர்ந்திட, தீயினில் பிறந்து, கணவன்மார்கள் ஐவரும் அருகு இருக்க, கற்றோரும், கருணையாளரும், உறவினரும் உடன் இருக்க, எதிரிகள் பலர் சூழ்ந்திருக்க, கயவன் ஒருவனால் தன் மானத்திற்கு இழுக்கு நேரிட்ட நிலைக்குத் துவாபரயுகத்துத் திரௌபதி விளங்கினாள். இந்நிலையில் திரேதாயுக இராமனின் குண இயல்புகள், காவிய நிகழ்ச்சிகள் ஆகியவற்றை ஒருசிறிது சிந்தித்துப் பார்த்தோமேயானால் அதுவே தனி மனித உயர்வுக்கும், பின்னர் சமுதாய மேம்பாட்டுக்கும் வழிகாட்டும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

பதவி வந்தபோதும், பின்னர் பறிபோனபோதும் இராமன் காட்டிய பொறுமை, இனிமை, தந்தை சொல்லைத் தாரகமாகக் கொண்ட பெருமை, ஒருத்திக்கு ஒருவன் என்று இம்மண் அறிவுறுத்திய சிறப்பை உலகுக்குத் தானே நடத்திக் காட்டிய அருமை, இனம், மொழி, குலம் கடந்து பலரைத் தன் உடன்பிறப்புக்களாகக் கொண்ட மாண்பு, பிரச்சனையை தீர்த்திட வன்முறை வழி ஏற்காது அன்பு வழி நின்று செயல்பட்ட நீர்மை, எதிரிகளின் ஆற்றல்களுக்கு மதிப்பளிக்கும் தன்மை போன்றனதாம் இராமனை ஒரு உத்தம புருஷனாக - மரியாதை புருஷனாக உயர்த்தின. இராமன் பெற்ற இன்ப துன்பங்கள் பெரும்பாலானவற்றை நாமும் நம் வாழ்க்கையில் சர்வ சாதாரணமாக அனுபவிக்க நேர்ந்ததால்தான் இராமாயணம் படிக்கப்படிக்க, பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத கருத்தமுதமாக என்றென்றும் விளங்குகின்றது. இராமனது இக்குணங்களே, இராம காதை நிகழ்ச்சிகளே, அந்நிகழ்ச்சிகளை நகர்த்திடும் கதை மாந்தர்களே நமக்கு நம் வாழ்க்கையில் என்றென்றும் துணைபுரியும் வழிகாட்டிகளாக விளங்குகின்றன. நம்முடைய உயர்வுக்கு இராமனையும், நம் சமுதாய உயர்வுக்கு கண்ணனையும் வாழ்க்கை முன்னோடிகளாகக் கொள்வோமேயானால், அதுவே நம் பிறவிக்குப் பெருமையும், இம்மண்ணிற்குச் சிறப்பினையும் தந்திடும்.





# செய்திச் சுருக்கம்



தி.தி. தேவஸ்தானம் அண மையில் தனது 1994-95ஆம் ஆண்டு நிதிநிலை அறிககை அறிவித்துள்ளது. இவ்வ கையில், இவ்வாண்டு ரூ. 1.57 கோடி உபரி நிதிநிலை அறிக்கைத் தீட்டப்பட்டுள்ளது. கடந்த ஆண்டு திருமலைக்கோ யில் வருமானம் பின்வருமாறு:

உண்டி ரூ. 57.97 கோடி; தங்குவசதி அறைகள் ரூ. 6.2 கோடி; ஆர்ஜித சேவைகள் ரூ. 14.78 கோடி; சிறப்பு நுழைவு தரிசனம் ரூ. 10.75 கோடி; தங்கு வசதிகளுக்கான நன்கொடை ரூ. 2 கோடி; கல்வித்துறைகள் ரூ. 4.52 கோடி; மற்றவை மூலம் ரூ. 11.37 கோடி; இவ்வாண்டு ஒதுக்கப்பட்டுள்ள செலவு விவ ரங்கள் பின்வருமாறு: யாத்திரி கர்கள் வசதி ரூ. 27.71 கோடி; ஆர்ஜித சேவைகள் ரூ. 6.91 கோடி; பிரஸாதங்கள் ரூ. 7.45 கோடி; ஊழியர்கள் ஊதியம் ரூ. 34.52 கோடி; பராமரிப் புச் செலவு ரூ. 2. 52 கோடி; நன்கொடை ரூ. 12.84 கோடி; கல்வி ரூ. 11.71 கோடி; புதிய பொருள்களுக்கு ரூ. 9.25 கோடி; முதலீடு ரூ. 5 கோடி.

* * *

கர்நாடக மாநிலம் கே.ஜி.எப். அருகே பங்காரு திருப்பதியில் ரூ. 33 இலட்சம் செலவில் கட்டப்பட்ட தி.தி. தேவஸ் தான திருமண மண்டபத்தினை கர்நாடக மாநில முதல்வர் திரு. எம். வீரப்ப மொய்லி அவர்கள் அண்மையில் திறந்து வைத்தார். இது தொடர் பாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு தி.தி. தேவஸ் தான பொறுப்பாண்மைக்கு ழுத் தலைவர் திரு. ஏ. செங் கல்ரெட்டி அவர்கள் தலைமை வகிக்க, தி.தி. செயலாட்சித் தலைவர் திரு. டி.வி.எஸ்.என். மூர்த்தி அவர்கள் சிறப்பு விருந் தினராகப் பங்கேற்றார். நிகழ்ச் சிகள் யாவும் தி.தி. தேவஸ் தான மக்கள்தொடர்பு அலுவ லர் திரு. டி. சிவாஜி அவர்க ளின் மேற்பார்வையில் நடை பெற்றன. இந்நிகழ்ச்சியின் போது, திருமலைக்கோயிலுக் கென கர்நாடக மாநில அரசின் சார்பில் யானை ஒன்று பரி சாக அளிக்கப்படும் என்று திரு. எம். வீரப்பமொய்லி அவர்கள் தம்முரையில் குறிப்பிட்டார்.

* * *

## அகண்ட சங்கீத ஆராதனை விழா

ஸ்ரீதாள்ளபாக்க அன்னமா சார்யாவின் இரண்டாவது அகண்ட சங்கீத ஆராதனை விழா 9-3-94 மற்றும் 10-3-94 ஆகிய தேதிகளில் திருப்பதி ஸ்ரீஅன்னமாசார்யா கலாமந் திரத்தில் சிறப்பாக நடைபெற் றது. 9-3-94 அன்று காலை, விழாவினைத் தொடக்கி வைக் கும் வகையில் தி.தி. தேவஸ் தான பொறுப்பாண்மைக்குழுத் தலைவர் திரு. ஏ. செங் கல்ரெட்டி அவர்கள், அகண்ட ஜோதியை ஏற்றிவைத்தார். திரு வாளர்கள் நூகல சத்யநாரா யணா, டி. பசுபதி, ராமநா தன், ஜி. பாலகிருஷ்ணபிரஸாத், ஆனந்தபட்டர் உள்ளிட்ட 150 இசைக் கலைஞர்கள் அன்னமாச் சார்யாவின் சுமார் 400 கீர்த் தனைகளை 24 மணி நேரங்கள் தொடர்ந்து பாடியது, இவ்வி ழாவின் சிறப்பு நிகழ்ச்சியா கும். மேற்படி விழா நிகழ்ச்சி கள் யாவும், தி.தி. தேவஸ்தான அன்னமாசார்யா திட்டத்துறை யைச் சார்ந்த திரு. ஆனந்த பட்டர் அவர்களின் தனிமுயற் சியின் காரணமாக மேற்கொள் ளப்பட்டன.

* * *





பிரம்மஸ்ரீ D.V.L.N. மூர்த்தி அவர்கள் சிறப்பு விருந்தினராகப் பங்கேற்று 26-2-94 அன்று மாலை சிறப்புச் சொற்பொழிவாற்றினார்கள். தென்னிந்தியப் பக்தி இலக்கியப் பங்கு குறித்தும் , அதற்கு தி.தி. தேவஸ்தானம் ஆற்றிவரும் அரிய பணிகள் பற்றியும் இனிய கருத்துச் செறிந்த சொற்பொழிவு ஒன்று ஆற்றினார்கள்.

தலைமை தாங்கிய ஸ்ரீமத் பரமஹம்ச பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீஉ.வே. ஸ்ரீமான் ஸ்ரீரங்க நாராயண ஜீயர் சுவாமிகள் திருமலை திருப்பதி தேவஸ்தானம் பொதுவாக சனாதன தர்ம வளர்ச்சிக்கும், சிறப்பாக ஆழ்வார் அருளிச் செயல்களுக்கும், ஆச்சாரியர்கள் தத்துவ வெளியீடுகளுக்கும் ஆற்றிவரும் பணி பலவற்றை எடுத்துரைத்து செயலாட்சித் தலைவரின் எளிவந்த குணநலத்தைப் பாராட்டி, திட்டத்துறையை வாழ்த்தியருளினார்.

## அவதார உத்சவம்

குலசேகர ஆழ்வார் அவதார உத்சவம் பிப்ரவரி 22, 23இல் திருப்பதி அன்னமாசார்யா கலாமந்திரத்திலும், பிப்ரவரி 26, 27 இல் திருவரங்கம் ஸ்ரீரங்கநாதசுவாமி கோயில் ஸ்ரீரங்க விலாச மண்டபத்திலும், மார்ச்சு 3ஆம் நாள் குருவாயூர், குருவாயூரப்பன் மண்டபத்திலும் நிகழ்ந்தன.

பிப்ரவரி 22 மாலை 6 மணி அளவில் திருவாளர் பாலகிருஷ்ண பிரசாத் அவர்கள் தம் குழுவுடன் ஆழ்வார் பாடல்களை இசையுடன் பாடினார்கள். மறுநாள் மாலை முன்னாள் துணை வேந்தர் ஸ்ரீமான் உபய வேதாந்த N.S. இராமாநுஜ தாதாசாரியார் தலைமையில், குலசேகர ஆழ்வார் வாழ்வும் அவர்தம் அருளிச்செயல்களும் பற்றி, ஸ்ரீவேங்கடேசுவரா கீழ்த்திசை மொழியியார் கல்லூரி விரிவுரையாளர் ஸ்ரீமான் உபய வேதாந்த P.R. ரெங்கராஜன் அவர்கள் சொற்பொழிவாற்றினார்கள்.

திருவரங்கத் திருவிழாவில் திருமலை திருப்பதி தேவஸ்தான செயலாட்சித் தலைவர்



திட்டத்துறை இணை இயக்குநர் அறிக்கை படித்து முடித்ததும் ஸ்ரீமான் K.P.S. நாராயணன் அவர்கள் (ஸ்ரீரங்கநாத சுவாமி திருக்கோயில் அறங்காவல் குழுத்தலைவர்) விழாவைத் தொடங்கிவைத்து திருக்கோயில்களும் சமுதாயப் பணிகளும் குறித்துப் பேசினர். சிறப்புச் சொற்பொழிவாளர ஸ்ரீமான் உ.வே. G. நரசிம்ஹாசார்யா சுவாமிகள் குலசேகர ஆழ்வார் வாழ்வையும் வழியும் பற்றி உரையாற்றி திருப்பதியையும் திருவேங்கடத்தையும் இணைத்துள்ள ஆழ்வாரது மனக்கிடக்கையைப் பலவாறு பாராட்டிப் புகழ்ந்தார்.

ஸ்ரீமான் உ.வே. லட்சுமி பராசர பட்டர் சுவாமிகள் அனைவ

ரையும் அவையோர்க்கு நன்கு அறிமுகப்படுத்தினார்.

மறுநாள் 27-2-94 ஞாயிறு திருமதி N. சாருமதி (ஸ்ரீவேங்கடேசுவரா இசைநாட்டியக் கல்லூரி வீணை விரிவுரையாளர்) குழுவினர் குலசேகர ஆழ்வார் அருளிய பெருமாள் திருமொழிப் பதிகங்களை இசையுடன் பாடிப் பரவசப்படுத்தினார்.

மார்ச்சு 3ஆம் நாள் வியாழக்கிழமை ஸ்ரீ P.T. மோகன கிருஷ்ணன் ஸ்ரீகுருவாயூரப்பன் தேவஸ்தான குழுத்தலைவர் விழாவைத் தொடங்க, குருவாயூரப்பன் தேவஸ்தான செயலாட்சித் தலைவர் ஸ்ரீ கே. ராகவன் தலைமையில், வைக்கம் க்ஷேத்ர கலாபீட இயக்குநர் ஆதூர் ஸ்ரீK.K. ராமச்சந்திரன் நாயர் குலசேகர ஆழ்வாரும் கேரளதேசமும் என்னும் பொருளில் ஆராய்ச்சிச் சொற்பொழிவாற்ற, செல்வி சுகுமாரி இசைப் பொழிவு நிகழ்த்த ஸ்ரீ ஆர். சந்திரமௌளி ரெட்டி மற்றும் குழுவினர் ஆழ்வார் பாடல்களை இசைத்தனர்.

இணை இயக்குநர் வரவேற்கத் திரு. வி. வேணுகோபால் (மேலாளர் தி.தி. தேவஸ்தான தகவல் மையம்) நன்றிகூற விழா இனிது நிறைவேறியது.

தகவல்:

திரு. பொன். சௌரிராஜன்
துணை இயக்குநர்
ஆழ்வார் திவ்வியப்
பிரபந்தத்திட்டத்துறை

---

### மன்னிக்கவும்

மார்ச் மாத இதழ் 48ஆம் பக்கத்தில் "உங்களுடன்" தொடர்ச்சியின் தொடக்கத்தில் 'அறநெறி பிறந்ததாலும் தான்' என்பது 'அறநெறி மறந்ததாலும் தான்' என்று இருத்தல் வேண்டும்.

--ஆசிரியர்.

---

# தி.தி. தேவஸ்தானத்தாரின் அரும்பொருட் காட்சியகம்

இந்து சமயத்தின் பெருமையினையும், இந்திய மண்ணின் கலாசார அருமையினையும் பிறருக்கு எடுத்துக் காட்டி, அவை மேலும் சிறப்புறும் வகையில் நாளைய இந்தியனைச் சிந்திக்க வைக்கும் ஒரு வாய்ப்பாக, தி.தி.தே. மேற்கொண்டு வரும் பல முயற்சிகளில் ஒன்றாகத் திகழ்வது தற்போது மேலாண்மையினால் அமைக்கப்பட்டிருக்கும் அருட்பொருட் காட்சியகங்கள். தற்போது திருமலையில் கோயிலுக்கெதிரில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் அரும்பொருட்காட்சியகமானது 27-12-80 அன்று முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. என். சஞ்சீவி ரெட்டி அவர்களால் திறக்கப்பட்டது. இங்கு திருப்பதி மற்றும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ள பழங்கால நினைவுச் சின்னங்கள், கோயில்கள் சம்பந்தப்பட்ட வேலைப்பாடுகள், சிற்பங்கள், வைதீகச் சடங்கு முறைகள் யாவும் காட்சிக்கு வைக்கும் எண்ணத்தில் இக்காட்சியகம் உருவாக்கப்பட்டுள்ளது. மேலும், தி.தி. தேவஸ்தானத்தாரிடமும் மற்றைய இடங்களிலும் சேகரிக்கப்பட்ட மர வேலைப்பாடுகள், விக்ரகங்கள், உலோக உருவமைதிகள், இசைக்கருவிகள், போர்க்கருவிகள் இக்காட்சியத்தில் இடம் பெறச் செய்யும் முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. மறைந்த அறிஞர் திரு. வேட்டூரி பிரபாகர சாஸ்திரி அவர்கள் ஆந்திர நாட்டு பல ஜமீந்தார்களிடமிருந்து சேகரிக்கப்பட்ட பொருட்களும் இக்காட்சியகத்தை அலங்கரிக்கின்றன. மற்றொரு அரும்பொருட்காட்சியகம் (எஸ்.வி. கோயில்கலை களஞ்சியம்) வைணவ நெறிமுறைகளைச் சித்தரித்திடும் வகையில் திருப்பதியில் ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி வடக்கு மாடவீதியில் கச்சேரி நம்மாழ்வார் கோயிலுக்கருகே பெரியாழ்வார் மண்டபத்தில் அமைந்துள்ளது. இக்காட்சியத்தில் வைணவப் பிரிவின் ஆதியும், அதன் வளர்ச்சியும், சிற்பக்கலை, கோயிற்கலை, உருவமைதிகள், ஆழ்வார்கள், திவ்ய க்ஷேத்ரங்கள் மேலும் மற்றைய கலைகள் சம்பந்தப்பட்ட பொருட்கள் இடம் பெற்றுள்ளன.

**வைணவத்தின் ஆதியும் அதன் வளர்ச்சியும் :**

இப்பிரிவில் வைணவ மதத்தின் தொன்மை விளக்கப்பட்டுள்ளது. மகாவிஷ்ணு என்று வேதத்தாலும் ஸ்ரீமந் நாராயணன் என்று உபநிஷத்துக்களாலும் வணங்கப்பெற்று வளர்ந்த திருமால் வழிபாட்டு வரலாறு விளக்கப்பட்டுள்ளது. இத்திருமால் வழிபாடு இன்று நாடு முழுவதும் 200 வழி நிலைகளில் போற்றப்படுகின்றது. வைகானஸம், பஞ்சாராத்ரம் என்ற ஆகம முறைகளில் தென்னாட்டில் வழிபடப்பட்ட வைணவம் பற்றிய. வளர்ச்சி, அட்டவணை முறையில் விளக்கப் பட்டுள்ளது. தொன்மை மிக்க வைணவத்திருத்தலங்களில் காணப்பட்ட சித்திரங்களும், 15-வது நூற்றாண்டைச் சார்ந்த அரிய சிற்ப உருவமைதிகள் குறிப்பாக நாகலாபுரம் திருக்கோயிலில் கிடைக்கப்பெற்றவைகளும் இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

**கோயில் நிர்மாண விளக்கங்கள் :** ஆகம மற்றும் சிற்ப இலக்கணப்படிக் கட்டப்பட வேண்டிய கோயில் அளவு முறைகள், கோயில் கட்டுவதற்கு இடம், தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய நியதிகள, முறைகள் ஆகியன படங்கள், மாதிரிகள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

**சிற்ப அளவு முறைகள் :** ஆண், பெண் சிற்ப உருவமைதிகள் எந்த அளவு முறைகளில் இருந்திட வேண்டும் என்ற விளக்கங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

**சிற்பங்கள் :** விஷ்ணுவின் திருவுருவ அமைதிகள், எந்தெந்த உருவமைதிகளுக்கு எந்தெந்த வகையைன ஆடை, ஆபரணங்கள் இருந்திடல் வேண்டும் என்பதை இப்பிரிவு தெளிவுற எடுத்துக் காட்டுகின்றது.

**ஆழ்வார்கள் :** தென்னாட்டில் வைணவம் தழைத்தோங்க வகை செய்த ஆழ்வார்கள் மற்றும் விசிஷ்டாத்துவைதக் கொள்கையின் தந்தையான ஸ்ரீராமானுஜரின் வைணவத் தொண்டின் சிறப்பு இங்கு விளக்கப்படுகின்றது.

**வைதீகச் சடங்குகள் :** அஷ்டதஸ சம்ஸ்காரங்கள் இப்பிரிவில் விளக்கப்பட்டுகின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை ஒவ்வொரு இந்துவும் கடைப்பிடிக்க வேண்டிய வைதீக சடங்கு முறைகள் தெளிவுறுத்தப்படுகின்றன. கோயில் வழிபாட்டின் முக்கியத்துவம் இங்குச் சித்தரிககப்படுகின்றது. வைணவக் கோயில்களில் பயன்படுத்தப்படும் பாத்திரங்கள், வாகனங்களின மாதிரிகளும் இங்குக் காட்சி அளிக்கின்றன.

**108 திருத்தலங்கள் :** 108 வைணவத் திருப்பதிகளில் உள்ள கோயில்களின் கட்டிடச் சிறப்பு, சிற்பச் சிறப்புக்கள் போன்றவற்றைத் தெரிந்து கொள்ளும் வகையில் 108 கோயில்களின் புகைப்படங்கள் இங்கு இடம்பெற்றுள்ளன.

**கலைகள் :** இப்பிரிவில் திருமாலின் புகழ் பாடிய மெய்யடியார்களின் சிறப்பு தெரிவிக்கப் பட்டுள்ளது. நவீன காலம் வரை சேகரிக்கப்பட்ட விஷ்ணு, சக்தி, ஷண்முகர் போன்ற பல்வேறு கடவுளர்களின் உருவமைதிகள் இங்கு இடம்பெற்றுள்ளன. குண்ட்ரபாக்கத்தில் 3வது ராஜராஜன் கோயிலிலிருந்து எடுக்கப்பட்ட சேகரிப்புகள் இப்பகுதியின் வரலாற்றைச் சிறப்புறக்கூறும்.

**அனுமதி நேரம்:** காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை.

**அனுமதிக் கட்டணம்:** பெரியோர்: ரூ.1/- சிறுர்: 0-50.

பொறுப்பாளர்.

# ஸ்ரீவால்மீகி வழியில் ராமாயணங்கள்

"சன்மிஷ்டை"



மா முனிவரும், மகாகவியுமான வால்மீகியால் இயற்றப்பெற்ற "ராமகாவியம்" அன்று முதல் இன்று வரை காலமெலலாம் மணம் வீசும் தெய்வீகக் காவிய மலராக காலத்தை வென்று ஞாலத்தில் நிததியப் புகழ்கொண்ட சததிய சரிதமாக விளங்குகிறது. ராம சரிதத்தை எத்தனை முறை கேட்டாலும், படித்தாலும் அலுப்பதில்லை.

வால்மீகியின் ராமாயணத்தை மகாகவிகள் காளிதாஸனும், கம்பனும், துளஸிதாஸரும் பாடிப் பரவியுள்ளதை அறிவோம். இந்திய மொழிகள் அனைத்திலுமே ராமசரிதம் இயற்றப்பெற்றிருக்கிறது. இப்படிப் பலமொழிகளையும் இணைத்து ஒருமைப்பாட்டுப்பாலம் அமைதத பெருமை ராமாயணத்துக்கு மட்டுமே உரியது. ராம காவியத்தைத் தத்தம் சொந்த மொழியில் கூறும் பக்தியைப் பின்னணியாகக் கொண்ட ஆர்வம் அன்று தொடங்கி இன்றும் தொடருகிறது.

இந்திய மொழிகள் பலவற்றிலும் இயற்றப்பெற்ற "ராமாயண"ங்களைக் காண்போம்.

## அஸாமிய மொழியில்

வால்மீகி ராமாயணம் பன்னெடுங்காலமாகவே அஸாமில் அறியப்பெற்று போற்றப்பட்டு வந்திருக்கிறது. கி.பி. பதினான்காம் நூற்றாண்டில் மகாமாணிக்கம் என்ற மன்னனின் அரசாங்கத்தின் போது, "மர்தவ கண்டெலி" என்ற கவிஞர் வால்மீகி ராமாயணத்தை அஸாமிய மொழியில் இயற்றினார். அதே நூற்றாண்டில் வாழ்ந்த "துரகாபார்" என்பார் "கீர்த்தி ராமாயணம்" என்ற நூல் இயற்றினார்.

பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த அஸாமிய வைணவப் பெரியார் ஒருவர், "ராம விஜயம்" என்ற பாசுர மாலையை தொகுத்ததாகத் தெரிகிறது. மகாதேவதேவர் என்பாரும் ராமசரிதத்தைப் பாராட்டினார். இவருடைய சீடர் சங்கரதேவர் ராமாயணத்தின் ஆதிகாண்டப்பகுதியை மட்டும் அஸாமிய மொழியில் பாடினார். ராம காதையின் உரைநடை வடிவை, முதன்முதலில் ரகுநாதர் என்பவர் அஸாமிய மொழியில் இயற்றினார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின சமீபத்தில் பலகவிஞர்கள் "ஸீதா கல்யாண"த்தை கவிதை அரங்கில் நடத்தி மகிழ்ந்திருக்கின்றனர். இவற்றுள் "தாஸ்" எனபாரின் "ஸீதா ஹரண்ய காவ்யம்" குறிப்பிடததககது.

## வங்காளியில்

வால்மீகியின் ஜீவ காவியத்தை முதன்முதலாக வங்காளி மொழியில் வடித்தவர் கிருத்தி வாஸர் என்பவராவார். இவர் பதினைந்தாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர். கௌடீஸ்வரர் என்ற அரசவைப் புலவர் ஒருவர் தம் மன்னர் கட்டளைப்படி ராமசரிதத்தை வங்காளியில் பாடியதாக ஒரு தகவல் உண்டு. நித்யானந்தர் என்பார் "ராமாயணம்" என்ற தலைப்பிலேயே ராம காவியத்தை வங்காளியில் இயற்றினார்.

பவானிஸாகர், கிவிசந்திரர் ஆகியோரும் ராமகாவியத்தை வங்காளியில் இயற்றினர். மதுசூதனத்தத்தா என்பார், "மேகநாத வதகாவ்யம்" என்ற தலைப்பில் ராம காவியத்தை வங்காளியில் இயற்றினார்.

பத்தொன்பதாம் நூற்றுண்டிலும், நவீன வங்காளி இலக்கியத்தில் ராம சரிதத்துக்கு உரிய இடமுண்டு. அவற்றுள் பிரபல எழுத்தாளர் கிரீஷ் சந்திர கோஷனின் "ராவண வதம்", "ஸீதா வனவாசம்" ஆகியவை வங்காளத்தில் பிரபலமானவை.

## குஜராத்தியில்

பதினேழாம் நூற்றுண்டில் வாழ்ந்த பிரேம்நாதர் என்பார் ராமாயணத்துக்கு குஜராத்தி வடிவம் கொடுத்தார். பதினெட்டாம் நூற்றுண்டில் கிரிதரர் என்ற கவிஞர் ராம சரிதத்தை குஜராத்தியில் பாடினார். "ராமவீரா" என்பது பாலண்ணு என்ற ராம பக்தரின் குஜராத்தி 'ராமாயணம். மந்திரியாக இருந்த கர்மண்ணு என்பார் "ஸீதா கல்யாணம்" என்ற நூலை இயற்றினார்.

நவீன குஜராத்தி இலக்கியத்தில் ஞானசங்கரர், மஹாசங்கரர் ஆகியோர் இயற்றிய "ஸீதா வனவாசம்" குறிப்பிடத்தக்கது.

## ஒரியாவில்

பதினாறும் நூற்றுண்டில் வாழ்ந்த பலராமதாஸர் "ஜகமோஹன ராமாயணம்" என்ற காவியத்தை ஒரியா மொழியில் கூறினார். "ரகுநாத விலாசம்" என்ற தலைப்பில் ஒரு கவிஞர் ராம கதையை ஒரியாவில் பாடியிருக்கிருர். ஹலதரதேளர் என்பார், "அத்யாத்ம ராமாயணம்" என்ற காவியத்தின் ஆசிரியர். இவரும் பதினாறும் நூற்றுண்டைச் சேர்ந்தவர் என்று கருதப்படுகிறது. உபேந்திர பஞ்சா, கேசவ ஹரிச்சந்திரா, கௌண்டின்யர் ஆகியோரும் ராம சரிதத்தை ஒரியாவில் இயற்றியிருக்கின்றனர்.

நவீன ஒரியா இலக்கியத்தில் மிஸ்ரா என்பாரின் "ஸீதா விவாஹம்" குறிப்பிடத்தக்கது. ராம சரிதத்தின் பல சுவை மிக்க ஏடுகளை நந்த கிஷோர், ராமசங்க ராய், ஹரிஹர், பத்ரிமோஹன் ஆகியோரும் படைத்துள்ளனர்.

## ஹிந்தியில்

ஹிந்தியில் துளஸிதாஸரின் "ராமசரிதமானஸா" பிரசித்தி பெற்றது. இவர் இந்நூலை கி.பி. 1575ல் தொடங்கி 1577ல் முடித்ததாகத் தகவல்கள் உள்ளன. துளஸிதாஸரின் ராமசரிதம், பெரும்பாலும் வால்மீகியின் மூல காவியத்தைத் தழுவியது. துளஸிதாஸருக்கு முன்பாக ராமநாதர் என்பார், ராமாயணத்தை ஹிந்தியில் இயற்றியதாகச் சொல்வர். துளஸிதாஸர் "ராம சரிதமானஸா"வைத் தவிர "ராமகீதாவளி' ', "தோஹ ராமாயணம்" ஆகிய நூல்களையும் இயற்றினார். கேசவதாஸ் என்ற ஹிந்திக் கவிஞர் (1555-1617) "ராம சந்திரிகா" என்ற தலைப்பில் ராம காவியத்தை ஹிந்தி மொழியில் படைத்தார்.

சிந்தாமணி திரிபாதி, மான்தாஸ், ஈஸ்வர பிரஸாத திரிபாதி, ராமேஸ்வர மேத்தா, மதுசூதனதாஸ், மணியாசிங், கணேஷ்தாஸ் ஆகிய கவிஞர்களும் ராம பெருமானின் காவியத்தை ஹிந்தியில் படைத்த பெருமைக்கு உரியவர்கள்.

பத்தொன்பதாம் நூற்றுண்டிலும், நவீன ஹிந்தி இலக்கியத்திலும், ராமாயண காவியம் பலரையும் கவர்ந்திருக்கிறது. ஜானகி பிரஸாத், பாபு ரகுநாத்தாஜ் ஆகியோரது இலக்கியப் பணிகள் குறிப்பிடத்தக்கவை.

## மராத்தியில்

பதினாறும் நூற்றுண்டில் வாழ்ந்த ஏகநாதர் என்ற மராத்தியக் கவிஞர், வால்மீகி ராமாயணத்தைப் பின்பற்றி மராத்தியில் ராமாவதாரச் சிறப்புக்களைச் சித்திரிக்கும் அரிய நூலொன்றை இயற்றினார். "அத்யாத்ம ராமாயணம்" எனும் நூல் பாவார்த்தரா என்பாரின் ஒப்பற்ற படைப்பு. எழுநூறு பாடல்களில், மூக்தீஸ்வரர் என்ற மராத்திய கவிஞரின், துறவியான சமர்த்த ராமதாஸரின் மராத்திய ராமாயணங்களும் சித்தி பெற்றன.

ஸ்ரீதரர் "ராம விஜயத்"தின் ஆசிரியர். 'பஞ்ச சாம ராமாயணம்', "தாமரா ராமாயணம்" "லகு ராமாயணம்", "நிரோஷ்த ராமாயணம்", "காசீ ராமாயணம்" என்னும் பல ராமாயணங்கள் மராத்தி மொழியில் உள்ளன. சில நூல்களுக்கு

ஆசிரியர் யாரென்று தெரியவில்லை.

நவீன மராத்தி இலக்கியத்தில், அபயங்கரின் "ஸீதா சுயம் வரம்", அன்னாகிரிலோஸ்கரின் "ராம விஜயம்" ஆகியவை புகழ் பெற்றவை.

## கன்னடத்தில்

ராமாயணத்துக்குக் கன்னட வடிவம் கொடுத்த பெருமைக்குரியவர் பதினாறும் நூற்றுண்டில் வாழ்ந்த நாகசந்திரர் என்பவராவார். இவருக்கு அபிநவ பம்பர் என்றும் ஓர் பெயருண்டு. கம்பரின் ராமாயணத்தை நாம் "கம்பராமாயணம்" என்பது போன்று பம்பரரின் ராமாயணத்திற்கு, "பம்ப ராமாயணம்" என்ற பெயர் நிலைத்து விட்டது. தேவசந்திரர் எனற கன்னடக் கவி "ராமகதாவதாரம்" என்ற நூலை இயற்றினார்.

"ராம விஜய சரிதம்" தேவப்பாவின் படைப்பு. குமார வால்மீகி எனப்பட்ட நரஹரி என்பார் ராம சரிதத்தை சுருக்கமாகப் பாடினார். பதினெட்டாம் நூற்றுண்டில் வாழ்ந்த திம்மராயன் என்ற கவி "ஆனந்த ராமாயணம்", "பத்ர ராமாயணம்" ஆகியவற்றின் ஆசிரியர்.

சமீப கன்னட இலக்கிய உலகில் புட்டப்பாவின் ராமாயணம் பிரபலமானது.

## மலையாளத்தில்

மலையாள மொழியில் முதன் முதலாகப் பதினான்காம் நூற்றுண்டில் "ராமசரிதம்" இயற்றப் பட்டதாகத் தகவல்கள் உள்ள போதிலும், இதன் ஆசிரியர் யாரென்று தெரியவில்லை. பதினேழாம் நூற்றுண்டில் "ராமாயணசம்பூ"வை நம்தீரி என்ற கவிஞர் இயற்றினார். பணிக்கர், எழுத்தச்சன் ஆகியோரது ராமாயணங்களும் மலையாளத்தில் பிரபலமானவை.

நவீன மலையாள இலக்கியத்தில் பத்மநாப சுரூப இயற்றிய "ராமசசநதிரவிலாசம்" கே.எம். பணிக்கர் படைதத "மண்டோதரி" ஆகியவைகளை ஜீவ காவ்யத்தின இன்றைய பிரதிபலிப்புகள் எனலாம்.

## தெலுங்கில்

"பாஸ்கர ராமாயணம்" எனற தலைப்பில் ராமாயணம் முதன்முதலாக பதிமூன்றும் நூற்றுண்டில் சுந்தரத் தெலுங்கில் இயற்றப்பட்டது. இதன் ஆசிரியர் ரங்கநாதர் என்ற கவி சிரேஷ்டர். பதினெட்டாம் நூற்றுண்டில் வாழ்ந்த "மொல்ல" என்ற பெண்மணி ராமாயணமும் பிரசித்தி பெற்றது. திக்கண்ணு என்ற கவிஞரும் தெலுங்கில் இராம பெருமையை வரைந்தவர்.

நவீன தெலுங்கு இலக்கியத்தில் மகாமகோபாத்யாய கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி, விஸ்வநாத சத்ய நாராயணன் ஆகியோரின் ராமாயண கதை கூறும் நூல்கள் முக்கியமானவை.

## மைதலியில்

மைதலி மொழியில் சந்திரஜா என்பார் தசரத குமாரரின் வரலாற்றைப் பாடலாக வரைந்திருக்கிறுர். இதை பாமர மக்களும் நாள்தோறும் வீட்டிலும், வேலைக்குச் செல்லும் போதும் பாடிக்கொண்டு செல்வர், நாடோடிப் பாடல்கள் போல! காதுக்கு இப்பாடல்கள் வெகு இனிமையாக இருக்குமாம். கர்ணபரம்பரையாக இருந்து வருகிறதாம்.

## காஷ்மீரியில்

காஷ்மீரி மொழியில் திவாகர பிரகாச பட்டர, பதினெட்டாம் நூற்றுண்டில ராமாயணததை இயற்றியிருக்கிறுர. காவியம் முழுவதும சிவபிரானும் உமாதேவியும் உரையாடுவது போன்று புனையப்பெறறிருக்கின்றது.

## பாரசீக மொழியில்

நவரத்தினங்கள் என்று சொல்லப்பட்ட ஒன்பது சான்றோர்கள் மகா சக்கரவர்த்தி அக்பரின் ராஜ்ய சபையை அலங்கரித்தனர். அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு துறையில் மேம்பட்டிருந்தனர். அவர்களில் "அப்துல் பாஸல்" என்னும் பாரசீக மொழிக் கவிஞரும் ஒருவர். அக்பர் சக்கரவர்த்தி இவரை மிகவும் நேசித்தார். அப்துல் பாஸல் - பாரசீக மொழியில் - வால்மீகியின் ராமாயணத்தைப் பின்பற்றி ராமாயணம் எழுதினார். அக்காலத்தில் அநத ராமாயணம் மிகவும் பிரபலமாகக் கருதப்பட்டது. சக்கரவர்த்தியிடம் ராமாயணப் பிரதிகள் மூன்று மட்டும் இருந்தன. அதில் ஒரு பிரதி, தனது பிரிதிநிதியான "மான் ஸிங்" இடம் கொடுத்ததாகச் சொல்வர். அப்பிரதி இராஜஸ்தானத்தில் இருப்பதாகத் தெரியவருகிறது. அந்த ராமாயணத்தின் தலைப்புப் பெயர் தெரியவில்லை. ராமகதையைப் பரம்பரையாகச் சொல்லி வருகின்றனர் இங்குள்ள இராஜதானி மக்கள்.

## தமிழில்

தமிழுககுப் பெருமை சேர்த்தது கம்பனின் காவியம் தான் என்றுல் புலவர் உலகம் உவகை கொள்ளும் பத்தாம் நூற்றுண்

டில் வாழ்ந்த கம்பர் பெருமான் "ராம காதை" என்னும் நூலை இயற்றினார். இந்நூல் ஒப்பற்றதோர் படைப்பாக விளங்குகிறது.

### கம்பனுக்கு முன் தமிழில் ராமாயணம்

பாலாடைக்கட்டியெனத் தொட்ட இடமெல்லாம் சுடர் மிகு இன்பம் தருவது கம்ப ராமாயணம். காசில் கொற றத்து ராமன் கதையை வால் மீகியைப் பின்பற்றி எழு தியிருப்பதாகக் கம்பன் கூறி யிருப்பினும், சிற்சில இடங்க ளில் கம்பன் தமிழ் மரபைப் போற்றி வால்மீகியின் கருத்துக் களை மாற்றியுள்ளான்.

வால்மீகியின் கதைப் போக்கை தன் நோக்கால் நுண் ணியமாக ஆராய்ந்து, புதிய உத்திகளைக் கம்பன் படைத் துள்ளான். கம்பனுக்கு முன்பே தமிழில் ராமாயண நூல்கள் உண்டு. அவற்றையும் கூடிய வரை பின்பற்றி கம்பன் ராமா யணம் எழுதியிருக்கவேண்டும்.

### கம்பனின் சிறப்பியல்பு

காவிரி நாட்டில் வாழ்ந்தவன் கம்பன். கங்கையும் அவனுக்குக் காவிரிதான். தமிழ் மரபிலும், பண்பாட்டிலும் ஊறிய கம் பன், கதை அம்சத்தை மட்டும் வால்மீகியிடமிருந்து எடுத்துக் கொண்டு புதிய உத்திகளைக் கையாண்டு, அழகுப் படுத்தி யுள்ளான். கம்பனுக்கு முன்பு தமிழில் வழங்கிய ராமாயண நூல்களைக் காண்போம்.

### ராம கதை

பாரதம் பாடிய' பெருந்தேவ னார் என்னும் பெயருடைய புல வரொருவர் இருந்தார். அவர் ராமாயணத்தை "சீராம கதை' என்றே பண்டு வழங்கினர் என் கிறார், பெரும்புலவர் திரு. மு. இராகவய்யங்கார் ஸ்வாமி.

### வெண்பாவில் ராமாயணம்

கம்பன் விருத்தப்பாவில் ராமாயணம் எழுதியுள்ளான். விருத்தம் பாடுவதில் கம்பனுக்கு நிகர் கம்பன்தான். "விருத தமெனும் ஒண்பாவிற்கு உயர் கம்பன்" என்பது ஆன்றோர் வாக்கு. "வெணபாவிலும் ராமாயணம் தமிழில் இருந் தது" என்பதனை "யாப்பருங் கல விருத்தி" என்னும் செய் யுள் இலக்கண நூல் மூலம் அறியக் கிடக்கிறது.

யாப்பருங்கலத்திற்கு விருத்தி உரை எழுதியவர் - "பலவடி யான் வந்த பஃறொடை ராமா யணமும்" என்று எழுதியுள்ளார். எனவே, பஃறொடை வெண்பா வில் எழுதப்பட்ட ராமாயணம் தமிழில் அழிந்திருக்கவேண்டும்.

### வீரசோழியம் உரைகாட்டும் ராமாயணம்

"வீரசோழியம்" என்ற இலக் கண நூலின் உரையாசிரியர், ராமாயணக்கதை கூறும் மேற் கோள் பாடல்களைத் தந்துள் ளார். அவர் காட்டும் ராமாயண வெண்பாக்கள்:-

"மற்றிவனை மாலென்று அறிந்தால்
அவ்வாளரக்கன்
பெற்றி கருதுவதென் பேதையர்காள்
மற்றிவன்றன்
கண்டான் கடை சிவத்தற்-
குன்டோ கடலிலிங்கை
வண்டாரரக்கன் வலி"

"ஐயிருபது ஓசனையும்
ஆங்கோர் இடனின்றிக்
கைபரந்த சேனைக்
கடலொலிப்பத்தையல்
வழிவந் திராமன்
வடகரையான் என்றுன்
விழிவந்து வேறுக மீட்டு"

சில வெண்பாக்களை வீர சோழிய உரை கூறினாலும், வெண்பா யாப்பில் ராமாயணம் பண்டு விளங்கியது என்பதற்கு ஆதாரமாகிறது.

### ஆசிரிய மாலையில் ராமாயணம்

"ஆசிரியமாலை" என்ற தொகை நூல் புறத்திரட்டில் சேர்க்கப்பெற்றுள்ளது. அந்த ஆசிரியமாலை ராமன் வரலாறு பற்றிய பாடல்களையுடையது. ஆசிரியமாலை என்ற நூலால் கம்பனுக்கு முன்பும் தமிழில் ராமாயண நூல் உண்டு என்ப தற்கு ஆதாரம் ஆகிறது.

### ஆசிரியப்பாவில் ராமாயணம்

பஃறொடை வெண்பா, விருத் தப்பா ஆகிய செய்யுள் இனத் தில் ராமாயணம் விளங்கு வது போலே, ஆசிரியப்பாவி லும் தமிழில் ராமாயண நூல் விளங்கியது.

ஸ்ரீபுராணம் என்பது ஜைன நூல். மணிப்பிரவாளநடையில் அமைந்த அந்த நூலில் ஆசிரி யப்பாவில் இராமாயண நிகழ்ச் சிகள் எழுதப்பெற்றுள்ளன.

சீதாதேவியின் சோகத்தை சித் திரிக்கும் ஸ்ரீபுராண ஆசிரியப் பாவில் சில வரிகள்:

"மாற்றிவன் செய்த மாயாமானின்
நோற்றி லாதே நோக்கிய நோக்கின்
அருவினையேனை அருளிய மனத்தால்
மருவிய மாய வுருவதரற் கெழுந்த
மான்மறி தொடர்ந்து செல் வாள்
அரிபோலக்
கான்நெறி விடுத்துக் கடுவனம்
புகுந்து
மாயப் புணர்ப்பின்மன்னனை
நினைந்து

ஆயமும் தாயரும் தோழியும்
இன்றியோர்
நோதும லாளன் விதிவழி ஒழுகி
இடனிடை யிட்ட சேய்மைத்
தன்றியும்
கடலிடை யிட்ட காப்பிற் றாகிய
இலங்கை மூதூர் இடுசிறைப்பட்டு"

இவ்வாறு சீதையின் அவலத்தைச் செப்புகிறது ஸ்ரீபுராணம்.

## பலதிரட்டுக் கூறும் ராமாயணம்

தமிழ்நாடு அரசின் கையெழுத்துப் புத்தகச்சாலையில், பலதிரட்டு என்ற சுவடியில் ராமாயண வெண்பாக்கள் உள்ளதைப் பெரும்புலவர் திரு. மு. இராகவ அய்யங்கார் வெளிப்படுத்தியுள்ளார்.

"சனகன் மொழிக்கேட்டுத்
தவமுனிவன் சொன்னான்
தினகரனார் தெய்வக் குலத்
ஈதான் - மனமகிழ
வந்தசிறுச் சேவகனை
மன்னா அறியீரோ
இந்த வகை என்நினைந்தீர் என்று"

"வசிட்டனும் கோசிகனும்
மன்னவரும் கூடி
விசித்திரமா மங்கலச் சொல்விண்டு-
சசிக்கு நிகர்
மாமுகத்துச் சீதைக்கும் வாழும்
உருமிளைக்கும்
மாமுகூர்த்த மிட்டார் மகிழ்ந்து"

இவ்வெண்பாவில் சீதையின் திருமண நிகழ்ச்சியோடு, உருமிளை திருமண நிகழ்ச்சியும் காட்டப்பட்டுள்ளது. (இலக்குவன் மனைவியே உருமிளை)

## நச்சினார்க்கினியர் உரை-காட்டும் ராமாயணம்

வடமொழியும் தென்மொழியும் கற்றுத்துறை போகிய சொல்லோர் உழுவர் நச்சினார்க்கினியர், "உச்சிமேல் புலவர்கோள் நச்சினார்க்கினியர்" என்று பாராட்டப்பட்டவர். தொல்காப்பியப் பொருளதிகார உரையில்,

"ஆளவினை முடித்த அருந்தவ
முனிவன்
வேள்வி போற்றிய இராமன்
அவனோடு
மிதிலை மூதூர் எய்திய ஞான்றே
மதியுடம்பட்ட மாக்கண் சீதை
கடிவினை வின்னான் இடி-
ஒலி கேளாக்
கேட்ட பாம்பின் வாட்டம் எய்தித்
துயில் எழுந்து மயங்கினள் அதான்று"

என்ற ராமாயண வரிகளை நச்சினார்க்கினியர் எடுத்துக்காட்டியுள்ளார். வால்மீகியின் ராமனும் சீதையும் திருமணத்திற்கு முன் சந்திக்கவில்லை. கம்பராமனும் சீதையும் திருமணத்திற்கு முன் நோக்குகின்றனர். இது தமிழ் மரபு. இதனையே சுட்டுகிறது மேற்காணும் பாடல்.

## அகநானூற்றில் ராமாயணம்

தனுஷ்கோடி கடற்கரையில் விளங்கிய ஓர் ஆலமரத்து நிழலில் தங்கி, வானர வீரர்களுடன் ஸ்ரீராமன் ஆலோசனை செய்த போது, தொல்லை தந்த பறவைகளின் ஓசைகளைத் தம் திருக்கையால் அமர்த்தி அடக்கினான் என்ற நிகழ்ச்சியை அகநானுறு,

"வெல்போர் இராமன்
அருமறைக் கவித்த
பல்வீழ் ஆலம் போல"
என்று தெரிவிக்கிறது.

ஆலமரத்து நிழலில் ராமன் ஆலோசனை செய்த நிகழ்ச்சி ராமாயண நூல்களில் கூறப்படவில்லை. என்றாலும் அகநானூற்றின் மூலம், தமிழில் அகநானூற்றிற்கு முன்பே ஒரு ராமாயண நூல் இருந்திருக்க வேண்டும் என்பதை நன்கு தெளிவுபடுத்துகிறது இச்செய்தி.

## புறநானூற்றில் ராமாயணம்

ராவணன் சீதையைக் கவர்ந்து சென்றபோது தன் ஆபரணங்களை இடைவழியில் போட, அவற்றை வானரவீரர்கள் கண்டெடுத்து அணிந்த நிகழ்ச்சியை புறநானூற்றுப் பாடலொன்று சுட்டுகிறது.

"கடுந்தேர் இராமன் உடன்புணர்
சீதையை
வலித்தகை அரக்கன்
வவ்விய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட
குரங்கின்
செம்முகப் பெருங்கிளையுழைப்
பொலிந்தாங்கு"

என்பன புறநானூற்று வரிகள். இந்நிகழ்ச்சியின் தொடர்பை கம்பராமாயணத்திலும் காண்கிறோம். வால்மீகியும் சுட்டியுள்ளார்.

## மணிமேகலை காட்டும் ராமாயணம்

வானரங்கள் சேது கட்டிய செய்தியை கி.பி. 2ஆம் நூற்றூண்டு நூலான மணிமேகலை,

நெடியோன் மயங்கி நிலமிசைத்
தோன்றி
அடலரு முந்நீர் அடைத்த
ஞான்று
குரங்கு கொணர்ந்து எறிந்த
நெடுமலை எல்லாம்
அணங்குடை அளக்கர்
வயிறுபுக்காங்கு"
என்று வெகு அழகாகச் சுட்டுகின்றது.

## சிலப்பதிகாரம் காட்டும் ராமாயணம்

இளங்கோவடிகள், ராமன் வர

லாற்று நிகழ்ச்சியை கோவலன் கண்ணகி வரலாற்றுக்கு உவமையாகக் காட்டியுள்ளார். பலருக்கும் நன்கு தெரிந்த செய்தி தான் உவமையாக வரமுடியும். சிலப்பதிகார காலத்திற்கு (கி.பி. 2ஆம் நூற்றாண்டு) முன்பே தமிழில ராமாயணம் உண்டு என்பதற்கு,

"பெருமகன் ஏவவல்லது யாங்கணும்
அரசே தஞ்சமென்று அருங்கான்
அடைந்த
அருந்திரல் பிரிந்த அயோத்தி போலப்
பெரும்பெயர் மூதூர் பெரும்பே
துற்றதும்"

என்று சிலம்பு வரிகளும் மெய்ப்பிக்கும்.

## ஆழ்வார்களும் ராமாயணமும்

ஆழ்வார்கள் ஸ்ரீராமபிரானைப் பரம்பொருளாகிய "திருமால்" என்றே கருதி பக்தி பூர்வமாக அனுபவித்துள்ளார்கள்.

திருமங்கை ஆழ்வார் பாடிய,

"ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது
இரங்கி மற்றவற்கு இன்னருள்
சுரந்து
மாழைமான் மடநோக்கியுன் தோழி
உம்பி யெம்பி"
என்று ஒழிந்திலை உகந்து
தோழன் நீ யெனக்கு இங்கு
ஒழி என்ற
சொற்கள் வந்தடியேன் மனத்து
இருந்திட
ஆழிவண்ண! நின் அடியிணை
அடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்து
அம்மானே!"

என்ற பாடல்;

"ஆழநீர் கங்கை அம்பி கடாவிய
ஏழை வேடனுக்கு எம்பின்
நின் தம்பி
மங்கை கொழுந்தி"

என்ற கம்பன் வரிகளோடு ஒத்துள்ளது காண்க.

ராமன் கதைச் சுருக்கத்தை குலசேகர ஆழ்வார் பதினோரு பாடல்களில் சுவையுறத் தந்துள்ளார். "ஆங்கண் நெடுமதில்" என்று தொடக்கம் பெற்ற அப்பாடல்களை ராமாயணம் முழுவதும் படிக்க இயலாதவரகள் படித்து, ராமாயணம் படித்த பலனைப் பெறலாம்.

## முடிவுரை

வ.வே.சு. அய்யர் குறிப்பிடுவது போல கம்பராமாயணம் உலகப்பெருங்காவியங்களுள் முதன்மை பெற்றது. அக்காவியம் முதன்மை பெற கம்பன் தனக்கு முன் வழங்கிய தமிழ் ராமாயணங்களையும் ஆழப்படித்து உணர்ந்துள்ளான். உணர்ந்ததைச் சுவைமணக்கச் சொல்லியுள்ளான். கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ் வளர்ப்போம்! ராமன் புகழ் பாடுவோம்!!



## எம்பெருமானாரும் எம்பாரும்

திருக்கோட்டி நம்பிகளிடம் மந்திரோபதேசம் பெறுவதற்காக ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீரங்கத்திலிருந்து திருக்கோட்டியூருக்குப் பதினெட்டு முறை நடையாய் நடந்தார். இறுதியில் வெற்றி அடைந்தார். "இம்மந்திரம் மிக ரகசியமாய் இருக்க வேண்டும். வெளியில் யாரிடமும் கூறிவிடாதே" என்று முன் எச்சரிக்கை அறிவித்து நம்பிகள் ராமாநுஜருக்கு மந்திரோபதேசம் செய்தருளினார். அம்மந்திரத்தை அறிந்தவுடன் ராமாநுஜர் திருக்கோட்டியூர் பெருமாள் கோயில் கோபுரம் ஏறி ஊர் ஜனங்களை உரத்தக் குரல் எழுப்பி அழைத்தார். மெய் வருந்தி பெற்ற அம்மந்திர்ததை ஊர் அறிய முழக்கம் செய்தார். செய்தி அறிந்து நம்பிகள் சீறி எழுந்தார். "நீ கொடிய நரகம் அடைவாய்" என்று ர்ராமாநுஜர் மீது சொல் அம்பு வீசினார். ராமாநுஜர் அமைதியுடன் விடை அளித்தார். "சுவாமி! நான் ஒருவன் புகுந்தாலும் மக்கள் அனைவரும் நற்கதி அடைவார்கள் அல்லவா? அதனைக் கருதியே நான் ரகசிய மந்திரத்தை ஊர் அறிய வெளியிட்டேன். மன்னித்தருள வேண்டும்" என்றூர். நம்பிகள் நெஞ்சம் நெகிழ்ந்தார். "என்னே உமது கருணை! என்னே உமது ஜீவகாருண்யம்!" என்று ராமாநுஜரை நெஞ்சார நேசித்தார். "எம்பெருமானாரே!" என்று வாயார அழைத்தார். அன்றுமுதல் ராமாநுஜருக்கு ஒரு புதிய திருநாமம் எழுந்தது.

ராமாநுஜர் தமது சீடர் கோவிந்தபட்டர் என்பவருக்கு உபதேசம் அருளி சன்னியாச ஆசிரமம் வழங்கினார். அப்போது அவருக்கு 'எம்பெருமானார்' என்னும் திருநாமம் சூட்டிட விரும்பினார். ஆனால் சீடர் தனது ஆச்சாரியருடைய அத்திருநாமத்தை ஏற்க மனம் கூசி மெய் விதிர்த்து நின்றூர். எனவே 'எம்பெருமானார்' என்னும் திருநாமத்தை (ராமாநுஜர்) மாற்றி அமைத்தார். சீடருக்கு 'எம்பார்' என்னும் திருநாமத்தைச் சூட்டினார். சீடர் அதனை உவந்து ஏற்று உள்ளம் பூரித்தார்.

ஆர். சுப்பாராவ் - திருக்கோவலூர்.



# துளசியின் மருத்துவப் பயன்கள்

திரு. துரை. நாராயணஸ்வாமி - திண்டுக்கல்.

அங்கு இங்கு எனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்து விளங்கி அருள்பாலித்து வரும் ஸர்வேஸ்வரனான எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணனுக்கு மிகவும் உகப்பானது திருத்துழாய் என்னும் துளசி.

செண்பகம், மல்லிகை, பாதிரி, புன்னை, செங்கழுநீர், குருக்கத்தி, இருவாட்சி, கருமுகை ஆகிய எட்டுவகை மலர்களால் அருச்சித்தாலும் எம்பெருமான் திருத்துழாயின் நறுமணம் ஒன்றினால் மட்டும் மனம் மயங்கி மகிழ்ச்சி அடைவான் என்பது ஆச்சார்யார்களின் கருத்து. இதனாலேயே பலரும் தமது இல்லங்களில் துளசியை வளர்த்துப் பூசை செய்கிறுர்கள். துளசி இருக்கும் இடத்தில் ஸ்ரீமகாலட்சுமி நித்யவாசம் செய்கிறுள். இவ்வாறு பூசிக்கப்படும் துளசி பல சிறப்பான மருத்துவப் பண்புகளைக் கொண்டது. அவற்றுள் சில:

## நெஞ்சில் கபம் நீங்க

துளசி இலைச்சாறு ஒரு தேக்கரண்டி சுத்தமான தேன் ஒரு தேக்கரண்டி கலந்து முறித்து (அதாவது ஒரு இரும்புக் கம்பியைப் பழுக்கக் காய்ச்சி இதில் தோய்க்கவும்) தினம் காலை. மாலை மூன்று நாட்கள் அல்லது கபம் நீங்கும் வரையில் சாப்பிட வேண்டும். குழந்தைகளுக்கு 10 துளிகள் முதல் 20 துளிகள் வரையில் வயதுக்குத் தகுந்தவாறு கொடுக்க வேண்டும்.



## தொண்டைவலி, குரல் கம்மல், சளி, இருமல்

புதிய துளசி இலைகள் மட்டும்-மூவிரல் அளவு, மிளகு எண்ணிக்கையில் - 5, உப்பு - 2 சிட்டிகை.

இவை மூன்றையும் வாயில் விட்டு நன்ருக மென்று சாப்பிட்டபின், சிறிது வெந்நீர் சாப்பிட மூன்று அல்லது ஐந்து நாட்களில் குணமாகும். இதனைத் தொடர்ந்து தினம் இருவேளையாக எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் சாப்பிடலாம். எந்தக் கெடுதலும் செய்யாது.

## தீராத வாய்வு, மூச்சுப் பிடிப்பு

புதிய துளசி இலைச்சாறு - 1 தேக்கரண்டி, மேல்தோல் நீக்கி எடுத்த இஞ்சிச்சாறு - 1 தேக்கரண்டி, சுத்தமான தேன் - 2 தேக்கரண்டி. மூன்றும் கலந்து தினமும் காலை, மாலையாக மூன்று நாட்கள் சாப்பிடவும்.

## துளசி சர்பத்

புதிய சுத்தமான துளசி இலைச்சாறு 250 மில்லி, சீனி சர்க்கரை 200 கிராம். இரண்டும் கலந்து சிறிது தண்ணீர் விட்டு அடுப்பில் ஏற்றிக் காய்ச்சி சர்பத் போல செய்து ஆறிய பின்பு வடிகட்டி ஒரு பாட்டிலில் வைத்துக் கொண்டு தினமும் காலை, மாலை இரு வேளை 25 மில்லி சர்பத்துடன் சிறிது வெந்நீர் கலந்து சாப்பிட்டு வந்தால் இருதயம் வலிமை பெறும்; இரைப்பைக் கோளாறுகள் நீங்கும்; மூளை சுறுசுறுப்பாகும்; தொற்றுநோய்கள் வராமல் தடுக்கும். மற்றும் பெண்களுக்கு வரும் சூதக வாய்வு, கருப்பைக் குற்றங்கள், மாத விடாய்க் கோளாறுகள் நீங்கும்; இரத்தம் சுத்தமாகும். ஒரு மண்டலம் (45 நாட்கள்) சாப்பிட வேண்டும். இது எல்லோரும் வீட்டிலேயே செய்து கொள்ளக்கூடிய எளிய முறை.

## துளசிக் குடிநீர்

நீண்ட ஆயுளும் நல்ல ஆரோக்கியமும் பெற விரும்புவோர் இந்த எளிமையான வழியைப் பின்பற்றலாம்.

சுத்தமான தண்ணீர் - 5 லிட்டர், புதிய துளசி இலைகள் - மூன்று விரல்கள் அளவு, மேல் தோல் நீக்கிய சுக்கு - 10 செ.மி. (நசுக்கவும்) மிளகு

எண்ணிக்கையில் - 5 (நசுக்கவும்) ஏலக்காய்ப் பொடி - ஒரு சிட்டிகை. எல்லாவற்றையும் ஒரு மண்பாத்திரம் அல்லது "ஸ்டெய்ன்லெஸ் ஸ்டீல்" பாத்திரத்தில் போட்டு நன்ருகக் காய்ச்சி (இரண்டு நிமிடங்கள் கொதிக்க வைத்து) இறக்கி வடிகட்டி வைத்துக் கொள்ளவும். இது சற்று "சாக்லெட்" நிறமாக இருக்கும். இந்தக் குடிநீரை மட்டும் தினமும் பல மாதங்கள் சாப்பிட இரத்தம் சுத்தமாகும்; இரத்தக் கொதிப்பு, அழுத்தம் ஆகிய நோய்கள் வராது; இருதயம், இரைப்பை நுரையீரல் ஆகிய உறுப்புக்கள் பலப்படும்; காமாலை, காலரா, வயிற்றுக் கடுப்பு, டைபாய்டு சுரம், நிமோனியா சுரம் மற்றும் சுவாச காச நோய்கள் எதுவும் அணுகாது. இந்தக் குடிநீரைத் தினமும் தயாரித்துக் கொள்வதற்கு ஆகும் பணச்செலவு மிகவும் சொற்பம். ஆனால் குடும்பத்தின் மாதாந்திர "மெடிகல்பில்" வெகுவாகக் குறைந்து விடும்.

குளிர்பானப் பிரியர்கள் இதனைக் குளிர்பதனப்பெட்டியில் வைத்துக் குளிரவைத்தோ பனிக்கட்டிகளாகச் செய்தோ சாப்பிடலாம். குற்றமே செய்யாது. எல்லோரும் இதனைக் கையாண்டு பயன் பெறலாம்.

மேற்படி முறைகளில் உபயோகப்படுத்தும் துளசி சுத்தமாகவும், புதியதாகவும் இருக்க வேண்டும். உலர்ந்த இலைகளை உபயோகிக்கக்கூடாது. எம்பெருமான் சூடிக்களைந்த துளசி மிகவும் விசேஷமானது.

இது தவிர துளசியில் பல்வேறு வகைகள் உள்ளன. அவற்றின் மருத்துவப் பயன்களையும் சுருக்கமாகப் பார்ப்போம்.

செந்துளசி : முக்குற்ற நோய்கள், நஞ்சு இவை போக்கும்.

கருந்துளசி : (கிருஷ்ண துளசி) இருமல், தொண்டைக்கட்டு, நெஞ்சு சளி இவை நீங்கும்.

நாய்த்துளசி : அழலை, தலைப் பேன், பொடுகு போக்கும்.

முள் துளசி : எலி நஞ்சு, வெட்டுப்புண் ஆகியவை நீங்கும்.

கல்துளசி : கோழை இருமல், காய்ச்சல், கட்டி வண்டு நஞ்சு ஆகியவை போகும்.

இவ்வளவு மருத்துவப்பயன்களை உடைய எங்கும், எக்காலத்திலும் எளிதாகக் கிடைக்கக்கூடிய திவ்வியமான இந்தத் துளசியைப் படைத்து நாம் பய்ன்பெற நமக்கு அளித்தத் திருத்துழாய் மணக்கும் திருமார்பனான ஸ்ரீமந்நாராயண மூர்த்தியின் திருவடிக் கமலங்களைப் போற்றி வணங்கி இந்தக் கட்டுரையை நிறைவு செய்கின்றேன்.



---

# விண்ணப்பம்

தி.தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும ஆர்ஜித ஸேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத்தொகையினை தேசீயமயமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராப்ட்' D.D. அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக்கொள்ளப்படுகிருர்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்புவதால் கால விரயமும்,. நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக்கொள்கிரும்.

# இத்தனை கடவுள்கள் ஏன்?

பிற மதங்கள் மோட்சம் அடைய ஒரே கடவுளை, ஒரே வழியைப் பின்பற்றுகின்றன. இந்து மதத்தில் மட்டும் பலவகைகள் இருப்பது எதற்காக என்பது பலரது கேள்வி.

நம் வீட்டில் தயாரிக்கப்படும் உணவு ஒரே மாதிரி இருப்பதில்லை. வெவ்வேறு காய்கறிகளை வெவ்வேறு விதமாகப் பக்குவம் செய்து சாப்பிடுகிரும். அப்போதுதான் சமையல் ருசிப்படும். மேலும் ஒரே வகை உணவுகூட ஒருவீட்டில் இருப்பதைப் போல் இன்னொரு வீட்டில் தயாரிக்கப்படுவதில்லை. அவரவர் வீட்டு ருசிக்கேற்ப மாறுபடும். இதுவே நடைமுறை வாழ்க்கைப் பழக்கம். இந்து மதமும் வாழ்க்கை முறையை ஒட்டிய மதம்தான். அதிலும் 'வெரைட்டி' இருக்கிறது! யார் எதை நம்புகிருர்களோ அவ்வழியைப் பின்பற்றலாம். ஆனால், பலன் எல்லாவற்றுக்கும் ஒன்றுதான். வீட்டில் வெவ்வேறு வடிவங்களில் நிறங்களில் 'பல்பு' இருந்தாலும் அவற்றில் ஓடும் மின்சாரம் ஒன்றுதான். பார்வைக்கு வெவ்வேறு விதமாக இருந்தாலும் விளைவு ஒன்றுதான்.

திருமதி. கமலா மாரியப்பன் - கோவை.

# வள்ளலார்

திரு. கனகசுப்பிரமணியம் - சென்னை.





உலகில் தீமைகள் பெருகி, நன்மைகள் நலியும்போதெல்லாம், இறைவன் திருஅவதாரம் செய்கின்றான், அல்லது, இறைவன் திருவருளைப் பெற்ற அடியார்களை அனுப்பி வைக்கிறான் என்று பெரியோர்கள் கூறுவர். அம்முறையில் அவ்வப்போது, உலகத்தில் குறிப்பாக பாரதத்தில் சிறப்பாக செந்தமிழ் நாட்டில் தோன்றிய அருட்சான்றோர்கள் பற்பலர் ஆவர். அவர்களுள், திருவருட் பிரகாச வள்ளலார் என்ற சிறப்புப் பெயரும் இராமலிங்கம் என்ற இயற்பெயரும் பெற்றவர் வள்ளலார் என வழங்கும் இராமலிங்க அடிகள் ஒருவர் ஆவார். இவர் இறைவனால் இவ்வுலகிற்கு அனுப்பிவைக்கப்பெற்று, இறைவன் அருளைப் பெற்று வாழ்ந்தவர் என்பதை,

"அகத்தே கறுத்துப்
புறத்து வெளுத்திருந்த
உலகர் அனைவரையும்
சகத்தே திருத்திச்
சன்மார்க்கச் சங்கத்து
அடைவித்திட அவரும்
இகத்தே பரத்தைப் பெற்று
மகிழ்ந்திடுதற் கென்றே
எனை இந்த
யுகத்தே இறைவன்
வருவிக்க உற்றேன்
அருளைப் பெற்றேனே"

என்று தாம் பாடியருளிய பாடல் மூலம் கூறியுள்ளதைக் காணலாம்.

வள்ளற் பெருமான், 5-10-1823 ஞாயிறு அன்று, தற்போது வள்ளலார் மாவட்டம் என வழங்கும், தென்னார்க்காடு மாவட்டத்தில் தில்லையம்பதியாகிய சிதம்பரத்திற்கு வடமேற்கே உள்ள மருதூர் என்ற சிற்றூரில் இராமையாபிள்ளைக்கும், சின்னம்மையாருக்கும் ஐந்தாவது மகனாக அவதரித்தார்.

பொருளை வாரி வழங்கியவர்கள், "பொருள் வள்ளல்கள்", அருளை வாரி வழங்கியவர்கள் "அருள் வள்ளல்கள்" என நம்முன்னோர் கூறுவர். இத்தகைய அருள் வள்ளல்கள் பலர். அவர்களுள் வள்ளலார் என்ற பெயரையே பெற்றுத் திகழ்பவர் வள்ளலார் ஒருவர் தாம் ஆகும்.



வள்ளலாருடைய பெற்றோர் 'வைணவம், சைவம் இரண்டும் ஒன்றே', என்ற சமதர்ம கருத்துக் கொண்டவர்கள் என்பதை விளக்க, தம் மகனுக்கு இராம என்ற வைணவப் பெயரையும், லிங்கம் என்ற சைவப் பெயரையும் இணைத்து இராமலிங்கம் என்று பெயர் வைத்துள்ளதன் மூலம் அறியலாம்.

தம் பெற்றோர் கொள்கையில், தாமும் மாறாமல், வள்ளலார், வைணவம், சைவம் என்ற இரு மதத்தின் இணைப்புப் பாலமாக மட்டுமின்றி, உலகில் உள்ள எல்லா மதத்தினர்க்கும் ஒரு இணைப்புப் பாலமாக விளங்கினார் என்பதும், எம்மதத்திலும் உள்ள நல்ல கருத்துக்களைச் சம்மதமாக ஏற்றுக்கொண்டார் என்பதும்,

"எம்மத நிலையும்
நின்அருள் நிலையில்
இயங்குதல் அறிந்தனன் எல்லாம்
சம்மதம் ஆக்கிக்
கொள்கின்றேன் அல்லால்
தனித்து வேறு எண்ணியது
உண்டோ?"

என்ற திருவருட்பா பாடல் மூலம் உணர முடிகிறது.

வள்ளலாரின் கொள்கைகளில், மிக மிக முக்கியமான தலையாயக் கொள்கைகள் "ஆன்மநேய ஒருமைப்பாடு", "உயிர் இரக்கம்", "ஒன்றே குலம் ஒருவனே தேவன்", "இறைவன் ஒளி மயமானவன்", "மரணமிலாப் பெருவாழ்வு", "ஒளி வழிபாடு", "சாதி மத பேதமற்ற சமரச மனப்பான்மை ஓங்கவேண்டும்" என்பனவாகும்.

## 1. சமரச சன்மார்க்க சங்கம் :

வள்ளலார் சமரச சுத்த சன்

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத் திட்டம்

காடு வளர்ப்பு அவசியத்தை முன்னிட்டும் அரிய மரம், மூலிகை, கனிவகைகளை பயிரிடும் முக்கயத்துவத்தைக் கருத்திற்கொண்டும், குறிப்பாக திருமலையைச் சுற்றியும், மற்றும், திருப்பதி மலைச் சரிவுகளையும் சார்ந்த காட்டுப்பகுதியாக மாற்றி, ஓர் அழகான இயற்கை சூழ்ந்த தோற்றத்தை ஏற்படுத்திடும் வகையில் தி.தி. தேவஸ்தானத்தின் வனத்துறை கடந்த பல ஆண்டுகளாக பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றது. இவ்வகையில் இம்முயற்சியினை மேலும் தீவிரமாக்கிடும் வகையிலும், இம்முயற்சியில் வேங்கடவன் பக்தர்ளையும் பெருமளவில் பங்கேற்க செய்யவும், தி.தி. தேவஸ்தானம் கீழ்வரும் பல புதிய காடு வளர்ப்பு மேம்பாட்டுத் திட்டங்களை மேற்கொண்டுள்ளது. இத்திட்டங்களை நாட்டிலுள்ள பக்தர்கள் ஓர் அரிய வாய்ப்பாகக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

## விருக்ஷ ஸம்வர்த்தனம்

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் ஒரு ஏக்கர் நிலம் 'மரம் வளர்ப்பு' நிலமாக மாற்றப்படும்.

சலுகைகள் :

இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இந் நிலம் அழைக்கப்படும்.

* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் சாதாரண நாட்களின் போது இரண்டு நாட்கள் தங்க, தங்கு வசதிகள் இலவசமாக அளிக்கப் படும்.
* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர்களுக்கு சிறப்புநுழைவு தரிசன வசதி செய்து தரப்படும்.

நன்கொடை : ரூ. 15,000

## விருக்ஷ பிரஸாதம்

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆண்டும் 100 பழ அல்லது மலர் விதைகள் விநியோகிக்கப்படும்.

சலுகைகள் :

* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் சாதாரண நாட்களின் போது இரண்டு நாட்களுக்கு இலவச தங்கு வசதி அளிக்கப்படும்.
* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர்களுக்கு சிறப்பு நுழைவு தரிசன வசதி அளிக் கப்படும்.

## ஸ்மாரக வனாலு

(நினைவு மரங்கள்)

இத்திட்டத்தின் கீழ் தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும்.

சலுகைகள் :

* நன்கொடையாளரின் பெயர் அத்தோப்பிற்கு வைக்கப்படும்.
* ஐந்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர்களுக்கு சிறப்பு நுழைவு வசதி மேற்கொள்ளப் படும்.

நன்கொடை : ரூ. 2000

## வன சம்ரக்ஷண பாகஸ்வாமயம்

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கையான காட்டுச் சூழ்நிலை பாதுகாத்து மேம்படுத் தப்படும்.

சலுகைகள் :

* இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாளரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர் தேர்ந்த இடத்தில் காட்சியாக் கப்படும்.
  ஓர் ஆண்டின் போது, 5 நபர்களுக்கு சிறப்பு நுழைவு தரிசன வசதி மேற்கொள்ளப்படும்.

நன்கொடை : ரூ. 1000

## அத்யயன வனாலு

இத்திட்டத்தின் கீழ், தாவர இயல் பூங்காவில் ஒரு குறிப்பிட்ட செடியினம் நடப்பட்டு பராமரிக் கப்படும்.

சலுகைகள் :

* செடியருகே நன்கொடையாளரின் பெயர் காட் சியாக்கப்படும்.

நன்கொடை : ரூ. 500

## விருக்ஷ தத்ததா

(மர தத்தெடுப்பு)

இத்திட்டத்தின் கீழ் திருமலை மலை வழிச்சாலை ஓரமாக மரம் நடப்பட்டு தத்து எடுத்துக்கொள் ளப்படும்.

சலுகை :

* மரத்தின் அருகே நன்கொடையாளரின் பெயர் காட்சியாக்கப்படும்.

நன்கொடை : ரூ. 250

ஏழுமலையான் நின்றருளும் இப்புனித மலைகளை பசுமையும், அழகும் மிளிர்ந்து விளங்கிட, மேற்படி திட்டங்களுக்கு தாராளமாக நன்கொடை அளிக்க முன் வருமாறு பக்தர்கள் கேட்டுக் கொள் ளப்படுகிறார்கள்.

<u>கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்</u>

THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517501.

மார்க்கம் என்ற ஒரு பெருநெறியை உருவாக்கினார். கடவுள் ஒருவரே என்பதும், அவரை உண்மை அன்பால் ஒளி (ஜோதி) வடிவில் வழிபட வேண்டுமென்பதும், சிறு தெய்வ வழிபாடு கூடாதென்பதும், அத்தெய்வங்கள் பெயரால் உயிர்ப்பலி கூடாதென்பதும், புலால் உண்ணலாகாதென்பதும், சாதி மத சமயம் முதலிய எவ்வகை வேறுபாடும் கூடாதென்பதும், எவ்வுயிரையும் தம் உயிர்போல் எண்ணும் ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமையைக் கைக்கொள்ள வேண்டுமென்பதும், ஏழைகளின் பசி தவிர்த்தலாகிய சீவகாருண்ய ஒழுக்கமே பேரின்ப வீட்டின் திறவுகோல் என்பதும் சமரச சன்மார்க்கக் கொள்கைகளில் தலையாயதாகும். இக்கொள்கைகளைப் பின்பற்றவும், பரப்பவும் வள்ளலார் சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் என்று ஒரு சங்கத்தை 1865ஆம் ஆண்டில் நிறுவினார்.

## 1. சத்திய தருமச்சாலை :

வள்ளலார் கொள்கைகளில் தலையாயது சீவகாருண்யம். சீவகாருண்யத்தை வள்ளலார் இருவகையால் வற்புறுத்துவார். அவை, 1) புலால் மறுத்தல், 2) அற்றார் அழிபசி தீர்த்தல் என்பனவாகும். அற்றார் அழிபசி தீர்த்தலாகிய சீவகாருண்ய பேரறத்தை நடத்துவதற்காக வடலூரில் சத்திய தருமசாலையை 23-5-1867இல் நிறுவினார்.

## 3. சித்தி வளாகம் :

நாளடைவில் தருமச்சாலையில் கூட்டம் பெருகவே, அமைதியை விரும்பித் தனித்துறை ஒன்றினை 1870ல் வடலூருக்குத் தெற்கே இரண்டு கல் தொலைவிலுள்ள மேட்டுக்குப்பத்திற்குச் சென்று நிறுவி அவரும் அங்கே உறையத் தொடங்கினார்கள். மேட்டுக்குப்பத்தில், அடிகள் உறைந்த திருமாளிகைக்குச் சித்திவளாகம் என்று பெயர். இப்பெயர் அடிகளே இட்டது. சித்தியைத் (வீடுபேற்றைத்) தரும் இடம் என்பது இதன் பொருள். 1870 முதல் 1874இல் சித்தி பெறும்வரை வள்ளலார் இங்கேயே உறைந்தார்கள். சித்தி பெற்றதும் இத்திருமாளிகையிலேயே.

## 4. சத்திய ஞான சபை :

கடவுளை, ஒளி (அருட்பெருஞ்சோதி) வடிவிற் கண்ட அடிகள் ஒளி (அருட்பெருஞ்ஜோதி) வழிபாட்டிற்கென வடலூரில் சத்திய ஞான சபையை 25-1-1872ல் அமைத்தார்கள். சத்திய ஞான சபையை இயற்கை விளக்கம் என்பர் அடிகள். அகத்தே காணுதற்குரிய அனுபவத்தைப் புறத்தே பாவனையாகக் காட்டுவதே சத்திய ஞான சபையின் நோக்கமாகும். அருட்பெருஞ்சோதியை மறைத்துக் கொண்டிருக்கும் வெவ்வேறு நிறமுள்ள ஏழுதிரைகளும், தத்துவ படலங்களே. நம்மிடமுள்ள, அஞ்ஞானமாகிய திரைகள் நீங்கப் பெற்றால், ஆன்ம ஒளியாகிய அருட்பெருஞ்சோதியைத் தரிசிக்கலாம் என்பது இதன் கருத்தாகும். அகத்தே தாம் பெற்ற அருட்பெருஞ்சோதி அனுபவத்தையே புறத்தில் சபையாகக் காட்டினார் என்ற கருத்தை 'திருந்தும் என் உள்ளத்தத் திருக்கோயில் ஞான சித்திபுரம் எனச் சத்தியம் கண்டேன்' என்பதும், 'சத்திய ஞானசபை என்னுட் கண்டனன் சன்மார்க்க சித்தியை நான் பெற்றுக்கொண்டேன்' என்றும் அடிகளாரின் திருவாக்குகள்.

இந்த ஞானக் கொள்கைகளின் கருத்துக்களை விளக்க, ஞானக் கற்கோயில்களைக் கட்டிய வள்ளற்பெருமான், இந்த ஞானக் கற்கோயில்களின் விளக்கத்தை உணர்த்திட ஐந்தாவதாகிய திருவருட்பா என்ற சொற்கோயிலையும் கட்டி வைத்தார்.

இந்த நிறுவனங்கள் நான்கும், மற்றும் திருவருட்பா நூல் ஒன்றும் சேர்ந்து இவ்வைந்தும் சன்மார்க்க உலகின் பஞ்ச பூதங்களாகும் என்பர் அறிஞர். இவை, நம் ஐம்பொறிகளாகவும் திகழும். இவற்றை நாம் உணர்ந்து, பயன்படுத்தினால் நம் வாழ்க்கை சிறப்புறுவதோடு மட்டுமின்றி, நாம் பெற்ற பிறவியின் நற்பயனையும் எய்தலாம் என்பர் சான்றோர்.

தற்காலத்தில் மனித நேயம், மனிதாபிமானம், மதநல்லிணக்கம், அவ்வுணர்வுகளுக்கு மதச்சார்பின்மை, தேசிய ஒருமைப்பாடு என்று பேசப்பட்டுவரும் கருத்துக்களுக்கும் மேலாக "உலக ஒருமைப்பாடு" என்றும், உலகில் உள்ள உயிர்கள் அனைத்தும் இறைவனால் படைக்கப் பெற்றவை என்பதை உணர்த்த 'ஆன்மநேய ஒருமைப்பாடு' என்று அன்றே முழக்கமிட்டவர். அன்றே அவ்வுணர்வுகளுக்கு வித்திட்டவர் வள்ளலார் ஆவார்.

வள்ளற்பெருமான் பாடிய 5818 பாடல்கள், 399 பதிகங்கள், இவை அனைத்தையும் சேர்த்து ஆறு திருமுறைகளாகப் பகுத்து, அதற்குத் "திருவருட்பா" என்று மகுடம் சூட்டியுள்ளனர்.

தமிழகத்தில் எண்ணிலடங்கா இறை நூல்களுக்கும், பல சிறப்பு நூல்களும் இருப்பினும், நான்கு நூல்களுக்கு மட்டும் தனிச்சிறப்பு உள்ளன என்பது சான்றோர் கண்ட முடிவாகும்.

முதல் சிறப்பு, பகவத் கீதைக்கு உரியதாகும். அதாவது, பகவத் கீதை மனிதனாகிய அர்ஜுனன் கேட்க, இறைவனாகிய கிருஷ்ண பரமாத்மா சொன்னது.

இரண்டாவது சிறப்பு திருவாசகத்திற்கு உரியதாகும். அதாவது, சிவபெருமானாகிய கடவுள்கேட்க, மனிதனாகிய மணிவாசகப்பெருமான் சொன்னது.

மூன்றாவது சிறப்பு திருக்குறளுக்கு உரியதாகும். அதாவது, மனிதர்களாகிய நாம் கேட்க, மனிதர்களில் புனிதராகிய திருவள்ளுவர் சொன்னது.

நான்காவது சிறப்பு, திருவருட்பாவிற்கு உரியதாகும். அதாவது, மனிதர்களிலும் அருளாளர்கள் கேட்க, அருளாளர்களில் அருளாளராகிய திருவருட்பிரகாச வள்ளற்பெருமான், இராமலிங்க அடிகள் சொன்னதாகும்.

வள்ளற்பெருமான், சைவ மதக் கடவுள்கள் பற்றிய பாடல்கள் பற்பல பாடியிருப்பினும், வைணவ மதத்தைப் பற்றிய கடவுள்களைப் பற்றியும் பாடியருளியுள்ளார். அப்பாடல்களில் ஸ்ரீராமசங்கீர்த்தனம் என்றுஇராமனைப் பற்றி,

"காராய வண்ண மணிவண்ண
கண்ண கனசங்கு சக்ர தரநீள்
சீராய தூய மலர்வாய நேய
ஸ்ரீராம ராம னெனவே
தாராய வாழ்வு தருநெஞ்சு சூழ்க
தாமோதராய நமவோம்
நாராயணாய நமவாமனாய
நமகேச வாய நமவே"

என்று பாடியுள்ளார். தற்போது திருவள்ளூர் என வழங்கும் திரு எவ்வுளூர் வீரராகவப் பெருமானைப் பற்றி "வீரராகவர் போற்றி பஞ்சகம்" என்ற தலைப்பில் ஐந்து பாடல்கள் பாடியுள்ளார். அவை அருமையானவையாகும். அவை:-

"தண்ணமர் மதியே சாந்தத்
தழைத்தசத்துவனே போற்றி
வண்ணமா மணியே போற்றி
மணிவண்ணத் தேவா போற்றி
அண்ணலே எவ்வுளூரில்
அமர்ந்தருள் ஆதி போற்றி
விண்ணவர் முதல்வா போற்றி
வீரராகவனே போற்றி"

பாண்டவர்தூ தனாகப் பலித்தருள்
பரனே போற்றி
நீண்டவன் என்ன வேதம்
நிகழ்த்துமா நிதியே போற்றி
தூண்டலில் லாமல் ஓங்குஞ்ஜோதி
நல் விளக்கே போற்றி
வேண்டவர் எவ்வுளூர் வாழ்
வீரராகவனே போற்றி

மேதினி புரக்கும் வேந்தர் வீறெலாம்
நினதே போற்றி
கோதிலா மனத்தே நின்று
குலாவிய கோனே போற்றி
ஓதிய எவ்வுளூரில் உறைந்தருள்
புரிவாய் போற்றி
வேதியன் தன்னை ஈன்ற வீர
ராகவனே போற்றி

இளங்கொடி தனைக் கொண்டேகும்
இராவணன் தனையழித்தே
களங்கமில் விபீட ணர்க்குக்
கனவர சளித்தாய் போற்றி
துளங்குமா தவத்தோர் உற்ற துய-
ரெலாம் தவிர்த்தாய் போற்றி
விளங்குநல் எவ்வுளூர் வாழ்
வீரராகவனே போற்றி.

அற்புத திருவை மார்பில்
அணைந்த பேரழகா போற்றி
பொற்புரு திகிரி சங்கு
பொருத்துகைப் புனிதா போற்றி
வற்புறு திகிரி சங்கு
மகிழ்வித்த வரதா போற்றி
வெற்புயர் எவ்வுளூர் வாழ்
வீரராக வனே போற்றி.

மற்றும் திருமகன் வாழ்த்து, ஸ்ரீராமநாமப் பதிகம் என்ற தலைப்புகளிலும் பாடியுள்ளார்.

இப்படி எல்லாக் கடவுள்களைப் பற்றியும் பாடியருளிய வள்ளற்பெருமான், இறுதியில் எல்லாக் கடவுள்களும் ஒளிமயமானவர்களே என்று அறுதியிட்டு உறுதியாக நம்பித் தெளிந்து, ஒளிவழிபாடே உரிய வழிபாடு என்று இறைவனை ஜோதி வடிவில் ஏற்றியும் போற்றியும்,

"ஜோதி ஜோதி ஜோதி சுயஞ்
ஜோதி ஜோதி ஜோதி பரஞ்
ஜோதி ஜோதி ஜோதி யருட்
ஜோதி ஜோதி ஜோதி சிவம்

வாமஜோதி சோமஜோதி வான-
ஜோதி ஞானஜோதி
மாகஜோதி யோகஜோதி
வாதஜோதி நாதஜோதி
ஏமஜோதி வியோமஜோதி
ஏறுஜோதி வீறுஜோதி
ஏகஜோதி ஏகஜோதி
ஏகஜோதி ஏகஜோதி
ஆதிநீதி வேதனே ஆடல்நீடு
பாதனே
வாதிஞான போதனே வாழ்க
வாழ்க வாதனே"

என்று பாடியுள்ளதால் வள்ளற்பெருமான், மதங்கடந்தவராக, சமயங்கடந்தவராக, சமரச சன்மார்க்கராகப் போற்றப்பட்டு வருகிறார். வள்ளலார் பாடியருளிய பாடல்களை நாமும் நாளும் ஓதி, உணர்ந்து வாழ்வில் உயர்ந்து வாழ்வாங்கு வாழ்வோமாக.



# வேதத்தில் புருஷஸூக்தத்தின் பெருமையும் அதன் விசேஷ அர்த்தங்களும்

அனுப்பியவர்:
திரு. எஸ்.கே. ராமானுஜாசாரி
சென்னை.

இப்புருஷஸூக்தம் எல்லா வேதங்களிலும் ஓதப்பட்டு வரு கிறது. இப்புருஷஸூக்தத்தைப் புகழ்ந்து பேசாத பெரியவர்கள் கிடையாது. பெரிய பாதகங் களுக்கும் பிராயச்சித்தமாக இப் புருஷஸூக்தத்தை ஜபிக்கும்படி சொல்லியிருக்கிறது. புருஷ ஸூக்தத்தால் விஷ்ணுயாகத்தை நடத்தினால் உலகம் செழித்து விளங்குமென்றும் சொல்லப்படு கிறது. வேதம் வல்லவ னான அந்தணனைக் கொன்ற வனும் புருஷஸூக்தத்தை ஜலத் தில் இருந்துகொண்டு ஜபித் தால் அப்பாதகம் ஒழியு மென்று சொல்லுகிருர்கள். புரு ஷஸூக்தத்தை ஸ்ரீமந்நாராய ணனை நினைத்து ஹோமம் செய்பவன் எல்லா பாபங்களிலி ருந்து விடுபட்டு மோக்ஷத்தை பெறுவான் என்று பல ரிஷிகள் பரக்கப் பேசியிருக்கிருர்கள்.

இந்த புருஷஸூக்தத்தின் பொருள் முத்கலோபநிஷத்தி லும் புருஷ ஸம்ஹிதையி லும் வெளியிடப்பட்டிருக் கிறது. ஸ்ரீகூரத்தாழ்வான், பட்டர், ஸ்ரீதேசிகன் முதலிய ஸ்ரீவிசிஷ்டாத்வைத ஆசார்யர் களும் புருஷஸூக்தத்தின் மஹி மையைச் சொல்லியிருக்கிருர் கள்.

[இங்கே கீழே கொடுக்கப்பட்ட கட்டுரையை ஆண்டவன் ஆசிரமத்தில் வெளிவரும் 'ரங்கநாத பாதுகா' என்ற மாதப் பத்திரிகையில் பல வருஷங்களுக்கு முன்பு வெளிவந்திருந்த விஷயங்களை வாசகர்கள் படித்துப் பயனடைய வேண்டுமென்று தொகுத்து எழுதியுள்ளேன்.]

ஜகத்காரணன் ஸ்ரீமந்நாரா யணன். அவனிடமி ருந்து இவ்வுலகம் உண்டாகி றது. அவனே பிராணிகளின் நன்மைக்காக வேதங்களாகிய விளக்குகளை அஜ்ஞானமாகிற இருளைப் போக்கிக் கொள்ள கொடுக்கிருன். அவனை ஆசி ரியனைக் கொண்டுதான் அறி யமுடியும். அவனைப் பெறுவ தற்கு பக்தி, பிரபத்தி என்று இருவழிகள் உண்டு. இவ்வி ரண்டு வழிகளைத் தவிர வேறு வழிகளால் அவனை அடையப் முடியாது. பக்தி, பிரபத் திகளைக் கொண்டு அவனை அடைந்தால் இம்மையிலும் மறு மையிலும் நாம் நமக்கு வேண் டிய பலன்களையும் பெற்று வாழ்வோம் என்பது இப்புரு ஷஸூக்தத்தில் சொல்லப்படும் திரண்ட பொருள். புருஷஸூக் தத்தின் பொருளை அறிந்து கொள்ளாதவர்களும் புருஷஸூக் தத்தை ஓதுவார்களேயானால் அதன் கருத்தை அறிந்த பக வான் பயனளிப்பார்.

ஸ்ரீய: பதியான நாராயணன் பரம், வ்யூஹம், விபவம், அந் தர்யாமி, அர்ச்சை என்று ஐந்து விதமாக அவதாரம் செய்கிருன். ஒவ்வொரு அவதாரத்திலும் பக் தர்களைக் காப்பதுண்டு என் பதை இப்புருஷஸூக்தம் விளக் கிக்காட்டுகிறது.

புருஷன என்கிற பதத் திற்கு எப்பொருளும் இல்லாத பிரளயகாலத்திலேயும் எந்தப் பொருள் அழிவற்றதாக விகா ரமற்றதாய் ஜலத்திலே இருந் ததோ அதுவே புருஷன் என்று தைத்திரீய ஆரண்யகம் முதலா வது பிரச்னத்தில் சொல்லப் பட்டு இருப்பதாலும், நாராயண னைப் பற்றி பேசுவதால் புருஷ ஸூக்தத்திற்கு 'நாராயணனுவா கம்' என்று பெயர் என்று ஸாய ணாசாரியர் சொல்லியிருப்பதா லும் ஸ்ரீய:பதியான நாராய ணன் புருஷஸூக்தத்தில் சொல் லப்படுகிருன் என்பது அறியத் தக்கது.

ஸ்ரீய:பதியினுடைய பஞ்சாவ தாரத்தை நம்மாழ்வார்,

விண்மீதிருப்பாய் மலைமேல்
நிற்பாய் கடல் சேர்ப்பாய்
மண்மீது மூல்வாயிவற்று
ளெங்கும் மறைந்துறைவாய்
எண்மீதியன்ற புறவண்டத்
தாயினதாவி,
உண்மீதாடியுருக்காட்டாதே
யொளிப்பாயோ

என்று பாடி அனுபவிக்கிருர்.

புருஷஸூக்தமும் முதலில் நான்கு ரிக்குகளாலே பரவா ஸுதேவனுடைய நிலைமையை "முன்னீர்ஞாலம் படைத்த வெம் முகில் வண்ணனே" என்று ஆழ் வார் அருளிச்செய்தபடி திவ்ய மங்கள விக்கிரஹத்தோடு ஜகத் காரணம் என்பதை சொல்லு கிறது. பிரகிருதிமண்டலத்

தைக் காட்டிலும் த்ரிபாத்விபூதி மூன்று பங்கு பெரியது என்றும் அதிலும் பெரியது ஜகத் காரணமான ப்ரஹமம் என்று ஸ்பஷ்டமாகச் சொல்லுகிறது. இப்பகவான் அறிவில்லாதவை களிலும் புகுந்து உள்ளான். ஆகவே, சித், அசித் என்னும் இரண்டும் பகவானுடைய உடல் என்பதையும் சொல்லுகிறது. முக்காலத்திலும் இவன் இருக்கிறான். மோக்ஷம் கொடுப்பவன் இவனே. இவன் ஜனங்களுடைய நன்மைக்காக அவர்கள் அனுபவிக்கும் ஒவ்வொரு பொருளிலேயும் தான் இருந்து அவைகளைச் சுவைக்க வைக்கிறான் என்பதையும் அழகாக சொல்லுகிறது.

ஐந்தாவது ரிக்கிலிருந்து பதினைந்தாவது ரிக் வரையில் வ்யூஹா வதரத்தை சொல்லுகிறது. ஸங்கர்ஷணன், ப்ரத்யும்னன், அநிருத்தன், பரவாஸுதேவன் என்ற இந்நால்வரையும் வ்யூஹம் என்று சொல்லுவார்கள். பதினாறுவது ரிச்கில் பகவானுடைய தியானம் சொல்லப்பட்டிருக்கிறது. 'த்யேயஸ்ஸதா ஸவித்ருமண்டல மத்யவர்த்தீ' 'ஆப்ரணகாத்' என்றும் சொல்லுகிறபடி ஸ்ரீவைகுண்டத்தில் ஸூர்யன் போல் ப்ரகாசித்துக் கொண்டிருக்கிறான் பகவான். அவனை குரு உபதேசத்தால் தெரிந்துகொள்ள வேண்டும் என்று சொல்லுகிறது.



இப்பகவானை பக்தி தவிர வேறொரு வழியால் அடைய முடியாது என்று சொல்லுகிறது. பதினெட்டாவது ரிக்கில் பக்தியை செய்ய சக்தி இல்லாவதன் யாகம் போன்றதான சரணாகதியைச் செய்யவும் என்றது. இதுவே சிறந்தத் தருமம். நித்யஸூரிகள் வாழும் வைகுண்டத்திற்கு இச்சரணாகதியைச் செய்தவர்கள் போய் சேர்ந்திருக்கிறார்கள் என்றுசொல்லி புருஷஸூக்தத்தின் முதல் அனுவாகம் முடிகிறது.

இரண்டாவது அனுவாகம் முறையே அர்ச்சாவதாரம், அந்தர்யாமி அவதாரம், வ்யூஹ அவதாரங்களைப் பேசி பகவானுடைய அவதாரத்தின் ரகசியத்தையறிபவர்கள் நித்யஸூரிகளுடைய பதமாகிய ஸ்ரீவைகுண்டத்தையடைய நாள் பார்த்துக் கொண்டிருப்பார்கள். இப்பகவானுக்கு ஸ்ரீதேவி பூதேவி இருவரும் இமைப்பொழுதும் அகலாது தேவிகளாக இருக்கிறார்கள். இவ்விருவர்களும் பகவானுடைய இரக்கத்திற்குக் காரணமானவர்கள் என்றும் சொல்லி இப்படிப்பட்ட பகவான் நமக்கு வேண்டிய ஸகல ஸௌபாக்யங்களையும் கொடுக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்து முடிவுபெறுகிறது.

இவ் இரண்டாவது அனுவாகத்தில் ஆறு ரிக்குகள் இருக்

கின்றன. அதில் முதல ரிக்கில் சொல்லப்படுவது அர்ச்சாவதாரம். அர்ச்சாவதாரமாவது 'தமருகந்த தெவ்வுரு வந்தானே' என்கிறபடியே சேதனர்க்கு அபிமதமான த்ரவ்யங்களிலே விபவ விசேஷங்களைப் போலன்றிக்கே தேசகாலாதிகாரி நியமமில்லாதபடி ஸந்நிதி பண்ணி, அர்ச்சக பரதந்தரமான ஸமஸ்த வ்யாபாரங்களையும் உடையவனாய் கொண்டு கோயில்களிலும் கிருஹங்களிலும் எழுந்தருளி நிற்கும் நிலை. மூன்றுவதில் அந்தர்யாமியின் அவதாரத்தைச் சொல்லுகிறது. மேலே விபவ அவதாரத்தையும் அதன் ரஹஸ்யத்தையும் சிந்தனை செய்யவேண்டியது அவசியம் என்றும் சொல்லுகிறது. அவதார ரகசியத்தை கீதாசார்யன் "பஹூனி மே வ்யதீதானி' என்று ஸ்பஷ்டமாக சொல்லியிருக்கிருர். அவதாரங்கள் ஸத்யமென்றும் பக்தர்களைக் காப்பதுதான் அவதாரத்திற்குப் பயன் என்றும் இந்த ரகசியத்தை இடைவிடாது நினைப்பவர்கள் மறுபிறவி எடுக்கமாட்டார்கள் என்றும் பெரியோர்கள் புருஷ ஸூக்தத்தின் கருத்தையறிந்து ஸாதித்திருக்கிருர்கள். நான்காவது ரிக்கில் இவன் எல்லோருக்கும் முதற்கிழங்காக இருந்தவன் அவனை வணங்குகிறேன் என்றது. ஐந்தாவதில் தேவர்களுக்கெல்லாம் ஈச்வரன் இவனே என்றும், ஆறுவதில் பகவான் நமக்குப்பக்கத்திலேயே இருந்து கொண்டு ஸகல ஸௌபாக்யத்தையும் இம்மையிலும் மறுமைக்கு வேண்டிய அறிவையும் கொடுக்கவேண்டுமென்று கூறிமுடிக்கின்றது.



தி.தி. தேவஸ்தானத்தாரின்

## ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்.

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்:

காலை

5-00 முதல் 5-30 வரை -- சுப்ரபாதம்
5-30 „ 6-00 வரை --ஸகஸ்ரநாம அர்சனை ரூ. 6-00
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர.)
6-00 „ 6-30 வரை --சுத்தி--முதல்மணி
6-30 „ 11-30 மதியம்--ஸர்வதரிசனம்
11-30 „ 12-30 „ --சுத்தி 2-வது மணி
12-00 „ 6-00 மாலை--ஸர்வதரிசனம்
6-00 „ 6-30 „ --சுத்தி, 3-வது மணி
6-30 „ 9-15 „ இரவு--ஸர்வதரிஸனம்
9-15 „ 9-30 „ --சுத்தி, ஏகாந்தசேவை.

### வெள்ளிக்கிழமைகளில்

காலை

9-00 முதல் 10-00 வரை --அபிஷேகம் (ரூ.100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 முதல் 10-00 „ --அபிஷேக தரிசனம் (ரூ. 2/-நபர் ஒருவருக்கு)

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்--சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | ஆர்ஜித சேவைகள் |
|---|---|---|
| (அ) பொங்கல் | „ ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம்ரூ. 63-00 |
| (ஆ) புளியோதரை | „ ரூ. 100/- | (ஆ) யானை வாகனம்ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | „ ரூ. 75/- | (இ) தோலோற்சவம்ரூ. 160/- |
| (ஈ.) கேஸரிபாத் | „ ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) |
| (உ) சர்க்கரைப் | | (ஈ) திருப்பாவாடை ரூ.2000/- |
| பொங்கல் | „ ரூ. 135/- | (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளி டாலர் கொடுக்கப்படும். |
| (ஊ) தோசை | „ ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய |
| (எ) ஸாகரபாத் | „ ரூ. 150/- | விரும்பும் பக்தர்கள் அதற்கான |
| (ஏ) ஸீரா | „ ரூ. 300/- | ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலே வாங்கிக்கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) |

* திருப்பதியிலிருந்து 5 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதிகளுண்டு.





# "அறத்தின் நாயகன் - இராமன்"

புலவர் திரு. வே. இராமசுவாமி - நாகர்கோவில்.

உலகில் வாழ் வாங்கு வாழும் ஒழுக்க நெறிமுறையில் நீடு நின்றவர்கள் மக்களின் இதயக்கோவிலில் தெய்வமாக வீற்றிருப்பர். "அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல்" ஆகிய மன மாசுக்களைக் களைந்து, கைமாறு கருதாக் கடப்பாடு கொணடு உதவும் அன்பின் மாட்சியே சிறந்த அறமாகும். "அறத்தான் வருவதே இன்பம்" எனற ஒப்பரிய நோக்கத்தில் வாழ்ந்த அருள் வள்ளல் - அறத்தின் நாயகன் இராமன். 'தரமத்தின் தோன்றலாக', 'அறததின ஆருயிர் தலைவனாக' விளங்கிய இராமனின் பெருமையைக் கூறப்போந்த கம்பன்,

"ஆசை பற்றி அறையலுற்றேன்
மற்றுஇக்
காசில் கொற்றத்து இராமன்
கதையரோ"

என்று கூறுவான். சுந்தரகாண்டத்தில் 'சிறையிருந்த செல்வி சீதை' அனுமனிடம் இராமனின் கருணையைக் கூறும் போது "அறத்தின் நாயகன்" என்று குறிப்பிடுகிருள். இராமன் தெய்வ மானுடமாக நடையின் நின்று உயர் நாயகனாக - அறத்தின் நாயகனாக 'இராமகாதை' முழுவதும் சித்தரித்துக் காட்டப்பட்டிருக்கிருன்.

## அறம் பொலியும் முகம் :

இராமன் கோசல நாட்டு மன்னன் தசரதனின் மைந்தர் நால்வரில் மூத்தோன். தசரதனின் உயிரனைய புதல்வன். நாட்டின் அரசாட்சியை ஏற்கும் உரிமையுடையவன். அவன் அழகைக் கம்பன்,

"மையோ! மரகதமோ! மறிகடலோ!
மழை முகிலோ,
ஐயோ! இவன் வடிவு என்பதோர்
அழியா அழகுடையான்"

என்பான. இராமன் அழகுக்கு மைபோன்ற கருமையும், மரகதத்தைப் போன்ற குளிர்ச்சி

பொருநதிய பச்சையும் , அலைகளையுடைய கடலின அழகும், மழைமேகம் பயன் கருதாமல அனைவர்க்கும் நீர்முது வழங்குவது போலத் தனனைச சரணடைந்தோருக்கு உதவும் அழகையும காட்டிய கமபன அதுடன் அமைநதுவிடவில்லை. 'ஐயோ' என்ற உணர்சசிக் குறிப்பால் இராமன அழகு ஒப்புயர்வற்றது, அதற்கு ஈடு இணை எப்படிக் கூறமுடியும் என்ற ஏக்கத்தைப் புலப்படுத்துகிறான் கம்பன். இராமன் வடிவமே அழகுடையது. அது சொல்லால் நிறைவு செய்யமுடியாத பேரழகு.

இராமன் கோசல நாட்டின நல்லாட்சியை ஏறகவேண்டும் என்று தசரதன் கூறினான். அப்போது "யாது கொற்றவன் ஏவியது; அது செயல் அன்றோ? நீதி எற்கு என நினைநது அப்பணி தலை நின்றான்" இராமன். 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்று போற்றிய இராமன், குறிப்பிட்ட நாளில் பட்டாபிஷேக நிகழ்ச்சிக்குச் செல்லுமுன் தன் சிற்றன்னை கைகேசியிடம் ஆசி பெற வருகிறான். ஆனால் கைகேசி ஏற்கெனவே பெற்றிருந்த இரு வரங்களையும் தசரதனிடம் அன்று கேட்டுப் பெற்றிருக்க, தாயென நினைக்கின்ற இராமன் முன்னே "கூற்றெனத் தமியள்" வந்து,

"ஆழிசூழ் உலகம் எல்லாம்
பரதனே ஆள நீபோய்த்
தாழிருஞ் சடைகள் தாங்கித்
தாங்கரும் தவமேற் கொண்டு
பூழிவெங் கானம் நண்ணிப்
புண்ணியத் துறைகள் ஆடி
ஏழிரண் டாண்டில் வாஎன்று
ஏவினான் அரசன்" என்றாள.

அப்பொழுது, 'செபபருங குணததிராமன' திருமுகச செவவி பொலிநதநிலை அறபுதமானது. அது சுடுசொலலைக் கேடபதறகுமுன, கேட்டபொழுது, கேட்டபினபு ஆகிய மூனறு நிலைகளில கைகேசி கூறிய அவ்வாசகம உணரக்கேட்ட அபபொழுது இருநதநிலை மிகவும நுட்பமானது. இராமனது முகம், முனபும, பினபும தாமரை மலரை ஒததிருக்க, அசசுடுசொலலால கேட்டபொழுது பொலிவு மிகபபெறறு "அப்பொழுது அலரநத செநதாமரையின் அழகை வென்றதாக" கம்பன் காட்டுகிறான.

இக்கருணை முகததைததான அசோகவனததில சிறையிருநத 'கறபுக்கனலி சீதை' மும்மடங்கு பொலிநத முகம என்று எண்ணிப் பாரக்கிறாள. இராமனுக்குப் பகைவராகிய அரக்கரை அழிக்கும வாயபபு கிட்டிவிட்டது என்ற ஒருமடங்கு மகிழ்ச்சி. அன்னை சொறபடி நடக்கும்பேறு இராமனுக்கு கிடைத்ததே என்ற இருமடங்கு மகிழ்சசி. உயிரினும் இனிய தன் தம்பி பரதனுக்குப் பட்டம் கிடைத்ததே என்ற மும்மடங்கு மகிழ்ச்சி இந்த மூன்று நிலைகளிலும் இராமன் முகம் பொலிந்த காட்சியை நினைத்திருந்தாள சீதை.

## இல்லற மாண்பு :

இராமன மிதிலையில் வில் லிறுத்தபோது மக்கள் "கயல் பொரு கடலுள் வைகும் கடவுளே காணும" என்றனர். இராமன அறததை நிலைநிறுதத, திருபபாறகடலிலிருநது அவதாரம செயதான என்று வியநது வணங்கினர். இராமன ஏகபததினி விரதம போன்ற குணங்களால உயரநத வள்ளல. இராமன தநத

"இந்த இப்பிறவிக்கு இருமாதரை
சிந்தை யாலும் தொடேன"

என்ற செவவறததை அசோகவனததில சீதை அனுமனிடம கூறுவது இராமனின இலட்சியமாணபைப புலபபடுததுகிறது.

## உறவில் அறம் :

இராமன 'அனபின வழியது உயிரநிலை', 'அனபோடு இயைநத வழக்கெனப' என்ற உயரிய நிலைகளைப பேணிச சகோதரரகளிடம் அனபு பாராட்டியவன. ஆழநீரில அமபிகடாவிய கஙகைத் துறை வேடர தலைவன் குகன, 'தீராக காதலால' 'தேனும் மீனும' கையுறைப் பொருட்களாகக் கொணரநது அனபின உயரவினையும பக்தியின ஆழததைக காட்டி இராமனைப் பணிநது நிறகிறான். 'அறததின் ஆழி' இராமன அவனைத தன தம்பியாக ஏற்றுககொண்ட உன்னத நிலை போற்றுதற்குரியது. குரங்கினத்தலைவன் சுகரீவனுக்கு அருளபுரிநது கிட்கிநதைககு அரசனாககியது மட்டுமினறி அவனையும் அனபின் மிகையால தமபியாக ஏறறுக்கொண்டான். அரககர குலத்தலைவன் இராவணனின் தமபி வீபிடணன் பகைவன பாசறையிலிருந்து வந்து தன்னிடம் சரணடைநத போது, "இலங்கைச் செல்வம நினனதே தந்தேன்" என்று கூறி அவனையும தமபியாக ஏறறுககொணடது அனபின் திணமையும கருணையும் ஆகும.

"குகனோடும் ஐவர் ஆனோம் முனபு;
பின் குன்று சூழ்வான்
மகனோடும் அறுவர் ஆனோம்;
எம்முழை அன்பின் வநத
அகனஅமர் காதல்ஐய! நின்னொடும்
எழுவர் ஆனோம
புகல்அரும் கானம் தந்து, புதல்வரால்

"போலிந்தான் நுந்தை" என்று இராமன் கூறுவது, சமதர்ம சமுதாயத்தையும், சகோதரத்துவத்தையும் [Universal Brother hood] எல்லோரும் ஓர் ~~குலம், எல்லோரும் ஓர் இனம்~~ என்ற உயரிய உணர்வையும் தூண்டுகிறது. இராமன் எல்லோரையும் சகோதரர்களாகக் கொண்டு உறவில் அறத்தைக் காட்டுகிறான்.

இலங்கை வடதிசை வாயிற் கோபுரத்தின் மீது ஏறி நின்ற இராவணனை விபீடணன் இராமனுக்குச் சுட்டிக் காட்டினான். அப்பொழுது உடனின்ற சுக்ரீவன் இராவணன் மீது பாய்ந்தான். இருவரும் போரிட்டனர். சுக்ரீவன் நெடு நேரமாகியும் திரும்பாமைகண்டு இராமன்,

"ஒன்றிய உணர்வே ஆய ஓர்
உயிர்த் துணைவ! உன்னை
இன்றியான் உளனாய் நின்று
ஒன்று இயற்றுவது"

என்று பரிதவித்தான். இராமன் தன்னைச் சரணடைந்தவர்க்காக மனம் நின்றூசலாடும் சகோதர வாஞ்சையால் அவனது உறவில் அறத்தைக் காணமுடிகிறது.

## மறத்தில் அறம் :

இராமன் கருணைவள்ளல், தருமத்தின் காவலன். வீரத்தில் வல்லவன். தன்னை சரணடைந்தவரைக் காக்கும் திறம் படைத்தவன். இராமன்-இராவணன் போர்க்களத்தில் சந்திக்கின்றனர். இராவணன் போர் புரிந்து ஆள்வதற்குரிய படைகள் எல்லாம் இழந்து தனியனாக நிற்கும் நிலைகண்டு, இராமன் இரக்கம் கொள்கிறான். "பகைவர்க்கும் அருளும் நன்னெஞ்சுடைய இராமன் இராவணனிடம், "நீ இப்போது தனியனாய் நிற்பதால் உன்னுடன் போரிட இசைந்திலேன். அதனால், "போர்க்கு இன்று போய் நாளை வா" என்று கூறிப் பேர ~~ருள் புரிந்தான்.~~

"ஆளையா உனக்கு அமைந்தன
மாருதம் அறைந்த
பூளை ஆயின கண்டனை;
"இன்று போய், போர்க்கு
நாளை வா" என நல்கினன்-
நாகு இளங் கமுகின்
வாளை தாவுறு கோசல
நாடுடை வள்ளல்"

இராமனது வீரச்சிறப்பினையும் மறக்கருணையினையும் வெளிப்படுத்தி நிற்கிறது இப்பாடல்.

தேவர்க்கும் யாவர்க்கும் வெற்றி கிடைப்பது அவர்கள் செய்த அறத்தினாலேயே ஆகும். மறத்தினால் வெற்றி கிடைக்காது என்பதை,

"அறத்தினால் அன்றி அமரர்க்கும்
அருஞ்சமம் கடத்தல்
மறத்தினால் அரிது என்ப"

என இராவணனிடம் போர்க்களத்தில் இராமன் அறம் உரைக்கிறான்.

## போர் அறம் :

இராமன் பகைவருக்கு அருளும் மாண்பு தன்னிகரற்றது. அவன் போர் அறத்தின் சிறப்பைத் தக்க தருணங்களில் எடுத்துக் கூறி, உலகம் உய்யும் வழியைக் காட்டிய அருள் வள்ளல்.

விசுவாமித்திரர் வேள்வி காக்க வனத்தில் இராமனை நிறுத்தியிருக்கும் போது தாடகை ஆர்ப்பரித்து சினந்து வேல் கொண்டு எறிய வருகிறாள். தாடகையை "பெண்ணென மனத்திடைப் பெருந்தகை நினைத்தான்". முனிவர் இராமனின் கருத்தறிந்து "பெண் அல்லள்; அரக்கி கொல்லுக" என்று பணித்தபோது அவளைத் துணித்தான்.

இராமன் இராவணனிடம் அங்கதனைத் தூதுவிடநினைக்கும் போது அரக்கர்கோனும், குரங்கினைத் தலைவனும் "கொற்றவர்க்கு உற்றது' என்று கூறினர். இலக்குவன் மறுத்து இராவணன் சீதையை சிறை வைத்தான். தேவர்க்கு ஊறு செய்தான். மக்களைக் கொன்ற அர்க்கனிடம் தூது ஆகாது' என்று ஆர்த்து எழுந்தான். இராமன் அவனிடம்,

"அயர்த்திலென்; முடிவும் அஃதே;
ஆயினும் அறிஞர் ஆய்ந்த
நலத்துறை நூலின் நீதி
நாம் துறந்து அமைதல் நன்றோ"

என்று இராமன் போர் அறம் கூறுகிறான்.

இராவணனுடைய ஒற்றர்கள் சுகசாரணர் என்போர் குரங்கு வேடம் கொண்டு வானரப் படை இரகசியங்களை அறிய வந்தபோது வீபிடணன் அவர்களைப் பிடித்து இராமனிடம் ஒப்படைத்தான். அவ்வொற்றர்கள் இராமனிடம் தஞ்சம் புகுந்தனர். இராமன் அவர்ளைப் புடையாது விடுமாறு கூறினான்.

"தாம்பிழை செய்தாரேனும் தஞ்சம்
என்று அடைந்தோர் தம்மை
நாம்பிழை செய்யலாமோ?
நலியலீர்! விடுதிர்"

என்று பகைவர்க்கு அருளுகின்றான்.

இலக்குவனும் இந்திரசித்தும் கடும் போரிட்டனர். இலக்குவனுடன் போரிட அஞ்சிய இந்திரசித்து வானில் மாயமாய்

மறைந்து விடவே இலக்குவன் கடுஞ்சீற்றம் கொண்டு அயன படையைத் தொடுக்க நினைத்த போது இராமன் தடுத்து நிறுத் தினான்.

"ஈன்ற அந்தணன் படைக்கலம்
தொடுக்கில் இவ்வுலகு
மூன்றையும் சுடும்; ஒருவனால்
முடிகிலது"

என்றான்.

"அயன்படையை விடுத்தால் அது இந்திரசித்தை மட்டுமல் லாது மூன்று உலகங்களையும் அழித்துவிடும் ஆற்றல் மிக்கது. இதனை தவிர்த்தி" என்று அறம் உரைக்கின்றான் "அறத்தின் நாய கன்" இராமன்.

இராமன் இலக்குவனை நிகும் பலைப் போருக்கு அனுப்புமுன் தந்தை தசரதன் சம்பரா சுரனுடன் போரிட்டு வென்ற நிகழ்ச்சியைக் கூறி, "சிவன் நான்முகன் படைக்கலங்களை இந்திரசித்து ஏவினால் அவற் றைத் தடுக்கவே நீயும் அப்ப டைகளை ஏவுதல் வேண்டும். இறைவன் தந்த படைக்கலங் களால் வெற்றி கொள்வதனால் உனக்குப் பெருமையில்லை. உன் அம்புகளின் திறத்தால் இந்தி ரசித்தை வெற்றிகொள்வதே சிறந்தது. செல்க" என உரைக் கிறான் இராகவன்.

## வாழ்வும் அறமும் :

இராமன் சுக்ரீவனிடம் "தீய காரியங்களைச் சிந்திக்காமல் மன்னுயிர் தழைத்தோங்க நற் காரியங்களை உவந்து செய்தல் வேண்டும். ஒருவன் செய்த வினையே பிறப்பிற்கும், இறப் பிற்கும் காரணமாகும். விதிக் கும் கடவுளாகிய அந்த நான்மு கனையும் விதிவிடாது. அறச் செயல்களைச் செய்யாது ஒழி கின்ற நாளே வாழ்விற்கு இறுதி நாளாகும். நற்செயல்களை உறுதி தரும் வாழ்வு அளிக்கும் செயல்களாகும்."

"......பூவின்மேல் புனிதருக் கேனும்
அறத்தினது இறுதி.
வாழ்நாட்டு இறுதி; அஃது உறுதி"

என்று பூதநாயகன் இராமன் வாழ்விற்கு உறுதி தரும் நல்ல றம் கூறுகிறன்.

## அறங்களில் விஞ்சிய பேரறம் :

இராமன் கைகேசியைத் தெய் வமாகப் போற்றியவன். தச ரதன் கைகேசியை, 'பழிக்கு நாணாப்பாவி', 'மாகயத்தி' என்று கூறிப் பழிக்கிறான். தசரதன் கைகேசியிடம்; 'நீ என் தார மல்ல; துறந்தேன்' என்று கூறி னான். வசிட்டரிடம் "மன்னே ஆவான் பரதன்; மகன் என்ற உரிமைக்கு ஆகான்" என்று கூறி உயிர் துறக்கிறான். மீட்சிப்பட லத்தில் தசரதன் வானுலகத் தேவர் வடிவில் இராமனுக்குக் காட்சி அளித்து, வரம் நல்க நினைக்கிறான். அப்போது தச ரதனிடம் இராமன்,

"தீயள் என்று நீ துறந்த என்
தெய்வமும் மகனும்
தாயும் தம்பியும் ஆம் வரம் தருக"

எனத்தாழ்ந்தான். தன்னைக் காட்டுக்கு அனுப்பிய கைகே சியை 'என் தெய்வம்' என்று இராமன் கூறுகிறான். தந்தை துறந்த தாயை, மகனை தன் தாய், தம்பி என்று கூறுதல் தகாது; அஃது அறம் ஆகாது. அதனால் அறக்கருணையாளன் இராமன் தன் தந்தை துறந்த தெய்வமும், மகனும் 'தாயும், தம்பியுமாக' வரம் தந்தருள வேண்டுமெனக் கேட்டுப் பெற் றுக் கொள்கிறான். அறக்கடவுள் இராமனது இந்த மகோன்னத மான பண்பை வாழ்த்தி பாடு கிறான்.

இவ்வாறு அறத்தின் நாயக னாக அவதரித்து, அறத்தாறு இதுவென அறியக் காட் டியவன் அயோத்தி இராமன். அவன் பிறவிப் பிணி போக்கும் பெரு மருத்துவன். அவனை சர ணடைவோம். அழியா வாழ்வு பெறுவோம்!

"நன்மையும் செல்வமும் நாளும்
நல்குமே;
தின்மையும் பாவமும் சிதைந்து
தேயுமே;
சென்மமும் மரணமும் இன்றித்
தீருமே
இம்மையே "ராம"வென் றிரண்டெ
ழுத்தினால்"

## கோலத்தின் தத்துவம்

கோலம் என்பது வெறும் கோடு கள் அல்ல. கோலத்தின் நடுவில் வைக்கும் புள்ளி சிவனையும் சுற்றி வளையும் கோடுகள் சக்தி யைக் குறிப்பவை. கோலம் போடு வதில் பெண்களுக்குத் தனி ஈடு பாடு உண்டு. கோலம் போடு வதால் கை நன்கு வளைந்து கொடுக்கும். முதுகும் வளைந்தே இருக்க வேண்டும். அகம்பாவத் துடன் இல்லாமல் குனிந்து இருந்தால் வளைந்து நெளிந்து சிவத்தை அடைய முடியும் என்பது கோலம் போடுவதின் தத்துவம்.

அம்மன் தரிசனம் — ஆதாரம் :

## வைதீக சடங்குகளில் தர்ப்பைப் புல் ஏன்?

இந்து மதத்தில் எல்லா வைதீக சடங்குகளுக்கும் தர்ப்பைப் புல்லை நாம் பயன்படுத்துகிறோம். ஏன் தெரியுமா?

மனிதனின் "ஆத்மா" என்பது வித்து இல்லாமல் ஏற்பட்டது என் பதை ஒப்புக்கொள்ளும் இந்து மதத்தில் வித்தே இல்லாமல் அதா வது விதை போடாமல் முளைத்து வளர்கின்ற தர்ப்பைப் புல்லைச் சடங்குகளுக்குப் பயன்படுத்துகி றோம். ஆதாரம் : ஆன்றோர் வாக்கு!

தகவல் : உமாசங்கர்
பிட்சாண்டர்கோயில்.

# நிகரில்லா நீர்மை

திரு. எல்.பி. சம்பத் - சென்னை.

கம்பரின் மேதா விலாசத்தையும், அவருக்கு குருகூர் சடகோபரிடமுள்ள அத்யந்த ஆசார்ய பக்தியையும், அவர் இயற்றிய இராமாயணத்தை திருவரங்கத்தில் மேட்டழகிய சிங்கர் சிரக்கம்பம் செய்து சிரித்து ஆமோதித்தையும் கண்ட ஆசார்ய ஸார்வ பௌமரான நாதமுனிகள், கம்பருக்கு 'கவிச்சக்ரவர்த்தி' எனப் பட்டப்பெயர் கொடுத்து தமது கோஷ்டியிலுள்ள வைணவர்கள் மூலம் அநந்தசயனத்தில் துயிலமர்ந்த வித்தினை சேவை செய்து வைத்து சடாரி முதலான மரியாதைகளுடன் பிராசித்தருள நியமித்தார். அவ்வாறே பெரிய பெருமாளுக்குத் திருமஞ்சனம் செய்வித்து பிரணவாகார விமானத்தில் பாம்பாணையில் பள்ளிகொண்டிருக்கும் ஸ்ரீரங்கநாதனையும் ஸ்ரீரங்கநாச்சியாரையும் ஆபாதசூடம் கண்ணிமையாமல் அவன் வடிவழகில் ஈடுபடும்படிச் செய்து தீர்த்தம், பிரசாதம், சடாரி மூலமாக விசேஷ மரியாதை நடப்பித்தார்கள். அரங்கேற்றப்பட்ட இராமாயணச் சுவடியை அரங்கன் திருவடியில் சமர்ப்பித்து அவனுடைய அங்கீகாரமும் பெற்றதாக திரும்பி எழுந்தருளப் பண்ணிக்கொண்டார்.

பிறகு கம்பர் ஸ்ரீமந் நாதமுனிகளையும் ஏனைய பிரபன்னர்களையும் தெண்டனிட்டு அவர்களிடம் நியமனம் பெற்றுக் கொண்டு, நேராக திருவெண்ணைய் நல்லூருக்கு எழுந்தருளி அங்கே தன்னை ஆதரித்து ஆளாக்கிய சடையப்ப முதலியைக் கண்டு பேசி, திருவரங்கத்தில் 'இராமாவதாரம்' அரங்கேற்றப்பட்ட சகல செய்திகளையும் முழுமையாக அவரிடம் விவரித்து அவரால் உபசரிக்கப்பெற்று உறையூருக்குச் சென்று குலோத்துங்க சோழனைக் கண்டார். அரங்கேற்றப் போய் வெகுநாட்கள் ஆகின்றதே என சோழராஜா வினவ, கம்பரும் தான் பிரயாசப்பட்டதை முடியிலிருந்து அடிவரையில் நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் கூற, குலோத்துங்கன், தானும் சடையப்பவள்ளலும் அவருடைய சகோதரர்களான கண்ணன், சரராமன் அனைவரும் கம்பர் வாக்கினாலேயே இராமாயணம் முழுமையும் கிரமமாகக் கேட்க வேண்டுமென்று விண்ணப்பிக்க கவிச்சக்ரவர்த்தி அதற்கு விநயத்துடன் இசைந்தார். அழைப்பிற்கிணங்கிப் பலதேசத்து மன்னர்களும், புலவர்களும் மேதைகளும் ஒருங்கிணங்கிப் புதியதாக நிர்மாணிக்கப்பட்ட மண்டபத்தில் இனிது வீற்றிருக்க் — கம்பர் தன் சொற்பொழிவை ஒவ்வொரு சுவடி ஏடுகளாக எடுத்து பிரசங்கத்தைத் துவக்கினார். இமைகொட்டாமல் இசைவு தெரிவிக்கும் வகையில் அங்கங்கே பொருள்நயங்ளை தெளிவு பெறக் கேட்டு அகமகிழ்ந்தனர். குற்றம் காணும் நோக்கத்தோடு விளக்கம் கேட்டனர் சிலர். கவியரசரின் விளக்கங்கள் வியக்கவைத்தது அனைவரையும். கம்பருடைய நோக்கம் யாதெனில், பின்வரும் சந்ததிகள் பாடல்களில் வெளிப்படையான அர்த்தங்களை மாத்திரம் எடுத்துக்கொண்டு உள்ளே பொதிந்திருக்கும் இம்மாகாதையில் வரும் சந்தர்ப்பத்திற்கேற்றவாறு தான் சூத்திரமாக அமைத்துள்ள கருத்துக்களைத் தெரிவிப்பதற்கு ஏது உண்டு என்று உன்னி சில பாடல்களுக்குத் தானே விளக்கங்கள் கூறவும், அது தெய்வசங்கற்பமாய் அமையவும் வந்தவர்களில் சிலர் வாயினால் வினாவெழுப்பத் தன் கருத்தைத் தகுந்த விடைமூலமாக அளித்துள்ளார்.

சுந்தரகாண்டத்தில் காட்சிப்படலத்தில், அசோகமரத்தடியில், தனக்கு நேர்ந்துள்ள துக்கத்தை எண்ணி எண்ணி ஏங்கி எப்போதும் ஸ்வாமியிடத்தில் சிந்தை வைத்தவளாய் உள்ளம் வெதும்புவாள். இந்த நிலையை வருணிக்கும் கம்பர் கீழ்கண்ட பாடலை மனமுருகி வாசித்தார்.

ஆழ நீர்க்கங்கை அம்பிகடாவிய
ஏழைவேடனுக்கு எம்பி
உன்தம்பி, நீ
தோழன், நங்கை கொழுந்தி
யெனச் சொன்ன
ஆழ நண்பினை உன்னி
அழுங்குவாள்

'ஆழமான கங்காநதியில் நாவாய் செலுத்துகின்ற வேடுவர் தலைவர் குகனிடம், தமது மேன்மையையும் அவனது கீழ்மையையும் பொருட்படுத்தாமல் நேசித்த காலத்தில் வேறுபாடில்லாமல் 'என் தம்பி, உன் தம்பி' என்றும், 'நீ என் தோழன்' என்றும் 'என் மனைவி உன்னுடைய மைத்துனி' என்று கூறி அன்பு பாராட்டிய கடலாழும் போலுடைய அப்பெரிய நட்பினை நினைந்து வருந்தத் தலைப்பட்டாள்'' என்று விளக்கம் கூறினார்.

அங்கு அவையில் குழுமியிருந்தவர்களில் சிலர் 'இதில் என்ன அதிசயமுள்ளது; சுவாமியானவர் சகல அந்தஸ்து, சுக போகங்களைத் துறந்து கானகம் வந்த நிலையில் "காலத்திற்கேற்ற கோலம்" என்ற வகையில் தாரதம்மியம் பார்க்காமல் அவனிடம் நேசம் கொண்டார்; ஒரு வேளை மீண்டு வந்து அரசாளும் வாய்ப்பு கிடைக்கப்பெற்று சகல சுகங்களையும் அனுபவிக்கும் போது, அந்த வேடுவத் தலைவன் பார்க்க வருவானானால் இவனையே நடப்பாரா!' என்று ஒரு கேள்வியை எழுப்பினார்கள்.

இதற்கு விடைகூறும் வகையில் கம்பர், கூடியுள்ள அனைவரையும் நோக்கி, "அந்த அதிசயத்தைச் சற்றுக்கேளுங்கள்" என்று துவங்கினார். ஸ்ரீஇராமன் பதினான்கு ஆண்டுகள் கழித்து அயோத்திக்குத் திரும்பி எழுந்தருளி பட்டாபிஷேகத்திற்காக ஆயத்தமாயிருக்கும் அவசரம்; பல அரசர்கள், பிரம்மசாரிகள், கிருஹஸ்தர்கள், சந்நியாசிகள் இன்னும் பற்பல முனிவர்களும், சுக்ரீவன், அங்கதன், அனுமான் மற்றுமுள்ள வானரசேனைகளும், குலகுருவான வசிஷ்டரும், சுமந்திரன் முதலாகிய அநேக மந்திரிமார்களும், ஏனைய பிரஜைகளும் அமர்ந்திருக்கவும், சிதாசமேதராய சிம்மாசனத்தில் இராகவ சிம்ம எழுந்தருளியிருக்கும் சமயம், சீதாபிராட்டி பிரமித்துப் புதியதோர் புன்முறுவலுடன் அருகில் அமர்ந்தாள்; கோசலை நாட்டவர்கள் இங்கிதம் தெரிந்தவர்களல்லவா! சக்ரவர்த்தித் திருமகன் பிராட்டியின் மனதை நன்குணர்ந்து கொண்டார். அதாவது இப்படிப்பட்ட கோலாகலமான பட்டாபிஷேகத்தன்று கங்கைக்கரையில் சிநேகம் கொண்ட வனசரனும் ஓடக்காரனுமான குகன் வருவானாகில் சுவாமியானவர் பழைய மாதிரியாகவே நட்பு காட்டுவாரா அல்லது தெரிந்ததாகவே காட்டிக்கொள்ளாமலிருந்து விடுவாரா என்ற எண்ணம் ஜானகியின் திருவுள்ளத்தில் ஏற்பட்டிருக்கிறது என்று உணர்ந்தார்; மேலும் தொடர்ந்தார் கவியரசன்.

"அவ்வமயம் அயோத்தியில் வறுமையே உரு எடுத்துவந்தாற்போல் பிச்சை எடுத்து பிழைக்கும ஒருவன் ஸ்ரீரகு குலதிலகன் சிறிய பிராயத்தில் தெருவீதியில் விளையாடிக் கொண்டிருக்கும் பொழுது அவனது வடிவழகில் தன் மனதை பறிகொடுத்து ஆசையுடன் எடுத்து அணைத்து முத்தமிட்டுக் கொஞ்சுவான்; அந்த



ஏழை ஸ்ரீஇராமபிரான் பிராட்டியோடும் இளவலோடும் கானகம் சென்ற நாள்முதல் அழுத கண்ணுமாய் சிந்திய மூக்குமாய் இருந்து வந்தான்; தாஸரதி திரும்பி வந்த செய்தி அறிந்து வெகுவிரைவாக ஓடி வந்து வாயில் காவலர்கள் தடுத்து நிறுத்தியதையும் பொருட்படுத்தாது, உள்ளே நுழைந்து தன்னுடைய அசுத்தமான பாதங்களினால் அனைவரையும் மிதித்து சிங்காதனத்தில் சீதை சமேதராய் சிங்காரத்துடன் வீற்றிருக்கும் சக்ரவர்த்தித் திருமகன் அருகில் நெருங்கி 'அடா ராமா! நீ எப்பொழுது வந்தாயடா?' என்று கட்டிக் கொண்டு அழுதான். சுவாமியும் வந்த அந்த ஏழையை வாரி அணைத்துக் கொண்டு அழுது தன் துக்கத்தைத் தெரியப்படுத்தினார்.'

'அவையில் கொலுவீற்றிருக்கும் அனைவரும் ஆச்சர்யத்துடன் வந்தவன் பைத்தியமாயிருக்கலாம் என நிர்ணயித்து அது ஸ்ரீராமனைப் பற்றிக்கொண்டதோ என்று துக்கத்துடன் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர். வறிஞனோ தன் அழுக்குத் துணியால் பீதகவாடைப் பிரானின் கமலக்கண்களைத் துடைத்து, "இனி அழவேண்டா, திருமுகம் வீங்கிப்போகிறது" என்று நல்வார்த்தைக் கூறினான்; ஸ்ரீரகுநந்தனன் துக்கம் சிறிது மாறி சபையோர்களைப் பார்த்து "பதினான்கு ஆண்டுகட்கு முன்பு இறந்த எங்கள் பிதாவாகிய தசரத ராஜாவை இன்று கண்டேன்" என்றுர்; சபையிலுள்ள அனைவரும் "இஃதென்ன ஆச்சர்யம்! பிச்சைக்காரனை தமது தகப்பனார் என்கிறுனே! விபவத்தில் வில்லெடுத்த வீரனுக்கு மூளைக்கோளாறு ஏற்பட்டது போலும் என்று மறுபடியும் மனதில் துக்கம் கொண்டார்கள்; மேலும் விளக்கத்தை தொடர்ந்தார் தினமணி வம்ஸதிலகம். "கேளுங்கள், என்னை முனிவர்கள் "பிரம்ம ஸ்வரூபம்" என்றும், தேவர்கள் 'நாதன்' என்றும், உறவினர் 'ரகுநாதன்' என்றும், உலகாள்வோர் 'தாசரதி' என்றும் எங்கள் மாமனார் வீட்டார் என்னுடைய பெயரைச் சொல்லி அழைக்கலாகாது என்று 'சீதாபதி' என்றும், ஏனையவர்கள் ராமபத்திரன், ராமச்சந்திரன் என்றும் என்னைச் சொல்லி குறிப்பிடுவார்கள்; எங்கள் தந்தை மாத்திரம், 'அடா ராமா' என்று அழைப்பதுண்டு. அதே பிரகாரம் என்னைக் கூவி அழைத்த இந்த ஏழை மஹாராஜனிடம் என் பிதாவை நான் இன்று கண்டு களித்தேன்' என்றுகூறி முடித்தவுடன், அவையிலுள்ள அனைவரும் "இவருக்குள்ள நீர்மை மற்று யாருக்குண்டு' என்று ஒருவருக்கொருவர் பேசி மகிழ்ந்தார்கள். அரியணையில் உடன் அமர்ந்திருந்த மைதிலியின் முறுவலுக்கும் விடை கிட்டியது" என்று கூறிமுடித்தார் கவிச்சக்ரவர்த்தி.

சுவாமி தன் திருப்பவளவாயால் தன் திருநாமங்களைக் குறித்து அருளிச்செய்தபடியே, நம் முன்னோர்கள்,

"ராமாய ராமபத்திராய
ராமச்சந்திராய வேதஸே
ரகுநாதாய நாதாய
சீதாயப் பதயே நம:

என்ற சுலோகம் மூலம் தினம் அனுசந்திக்க ஏற்படுத்தியுள்ளார்கள் என்றும் கூறினார் கவியரசன்.

திருவவதாரப் படலத்தில் சக்ரவர்த்தித் திருமகனை சௌலப்ய குணத்தின் சிகரம் என்றும், காருண்யத்தின் இருப்பிடம் என்றும் விளக்குவது தனி அழகு. பாடலின் அழகை அனுபவிப்போம்.

"எதிர்வரும் அவர்களை
எமையுடை இறைவன்
முதிர் தருகருணையின்
முகமலர் ஒளிரா
எதுவினை இடரிலை இனி
திறுமனையும்
மதிதரு குமரரும் வலியர்
கொல் எனவே
அஃதைய நினையெமதரசு
என உடையேம்
இஃது ஒரு பொருளல
எமதுயிருடன் ஏழ்
மகிதல முழுவதையும் உறு-
கவிமல ரோன்
உகு பகலளவென உரை
நனி புரிவார்.

## ஸ்ரீராமபிரானின் சிறப்பு

1. ஸ்ரீராமபிரான் இரண்டு தடவை அம்பு எறிவதில்லை. (ஒரே தடவையிலேயே வெற்றி வாகை சூடுகிறுன்.)
2. ஸ்ரீராம்பிரான் தன்னை அடைந்தவர்களை இரண்டு தடவை ரக்ஷிப்பதில்லை. (முதல் தடவையிலேயே முழுதும் ரக்ஷித்து விடுகிறுன்.)
3. ஸ்ரீராமபிரான் தன்னை யாசித்து வந்தவர்களுக்கு இருமுறை கொடுப்பதில்லை. (முதல் தடவையிலேயே வேண்டியவற்றை எல்லாம் அளித்து விடுகிறுன்.)
4. ஸ்ரீராமபிரான் இரு பேச்சு பேசுவதில்லை. அவன் சத்ய ஸந்தனாகையாலே கொடுத்த வாக்கை மீறுவதில்லை.

தகவல்: திரு. ஆர். கண்ணன் - சென்னை.

# ஸ்ரீவைஷ்ணவ மரபுச் சொற்கள்

திரு. எஸ். ஸ்ரீராம் - ஸ்ரீரங்கம்.

| | |
|---|---|
| அடியேன் | - நான் |
| அருளிச்செயல் | - நாலாயிர திவ்யப்பிரபந்தம் |
| அடிசில் | - உணவு |
| சாற்றுமுறை | - திவ்யப்பிரபந்தம் பாடுதல் |
| அத்யன உற்சவம் | - பகல் பத்து இராப்பத்து உற்சவம் |
| உஷ்ணோதகம் | - வெந்நீர் |
| உபதம்சம் | - ஊறுகாய் |
| ஆசிர்வாதம் | - பெரியோர் வாழ்த்துரை |
| கத்யத்ரயம் | - சரணாகதி ஸ்ரீரங்க ஸ்ரீவைகுண்ட கத்யங்கள் |
| கிரமம் | - வரிசை |
| திருமாளிகை | - வீடு |
| சாற்றுபடி | - பகவானுக்குச் செய்யும் அலங்காரம் |
| அமுதுபடி | - அரசி |
| அவப்ருதஸ்நானம் | - தீர்த்தவாரி |
| ஆலவட்டம் | - விசிறி |
| ஸாதித்தார் | - சொன்னார் |
| கடாக்ஷிக்கவேணும் | - பார்க்க வேண்டும் |
| ஐதிஹ்யம் | - கர்ணபரம்பரையாகக் கூறப்படும் நிகழ்ச்சி |
| உபவாசம் | - பட்டினிக் கிடத்தல் |
| உத்தரீயம் | - மேலே அணிந்து கொள்ளும் துணி |
| உத்தராபோசனம் | - உணவு உட்கொண்ட பின்னர் தீர்த்தத்தை மந்திரம் கூறி சாப்பிடுதல் |
| ஸாதித்தல் | - பரிமாறுதல் |
| கோயிலாழ்வார் | - மரத்தாலான கோயில் போன்ற பெட்டி |
| கிருஷ்ணாஜினம் | - மான்தோல் |
| அமுது செய்தல் | - உண்ணுதல் |
| சாற்றமுது | - ரசம் |
| சீதோதகம் | - குளிர்ந்த நீர் |
| ததீயர் | - திருமால் அடியார்கள் |
| தர்ப்பம் | - வைதீககிரியைகளுக்குப் பயன்படுதல் |
| கரியமுது | - பக்குவம் செய்யப்பட்ட கரியமுது |
| உதக சாந்தி | - சாந்தி அளிக்கும் தீர்த்தம் |
| உபேக்ஷை | - கவனியாதிருத்தல் |
| அக்காரவடிசில் | - திருக்கண்ணமுது |
| கைங்கர்யம் | - பகவானுக்கோ பாகவதர்களுக்கோ செய்யும் தொண்டு |
| அத்யாபகர்கள் | - ஆசிரியர், பிரபந்தம் அனுசந்திப்பவர்கள். |



இராமபிரான் காலையில் முனிவர்களுறையும் பொழில்களுக்குச் சென்று அந்திவேளையில் அரண்மனைக்கு மீண்டு வருவது வழக்கம். அவ்வமயம் மகிழ்ச்சியுடன் எதிர்கொள்ளும் நகரத்து மாந்தரை நோக்கி, அவர்கள் தன்னை குசல ப்ரச்னம் செய்வதற்குமுன், தான் முந்திக்கொண்டு, மிக்க கருணையுடன் திருமுகமலர்ந்து "என்னால் ஆக வேண்டியது ஏதாவது உளதா; துன்பம் ஒன்றும் உண்டாகாதிருக்கின்றதா; உமது மனைவியரும் அறிவுள்ள புத்திரர்களும் சுகமாகவும் நலம் குன்றாமல் வலிமையுடன் இருக்கின்றார்களா" என்று அவரவரது குடும்ப நலன்களை வினவுவதன் மூலம் தன் சீரிய பண்பை தெரியப்படுத்துவதை என்னே என்பது! அதற்கு, வினவப்பட்டவர்களும் "ஐய, நாங்கள் தங்களை அரசனாக உடையோம்; அதனால் ஒருகுறையின்றி வாழ்ந்து ஒருபெருங்காரியமன்று; தாங்கள், நான்முகன் வாழ்நாட்கள் என்று மனதிற்கும் கணக்கிற்கும் எட்டாத தினங்களாகச் சொல்லப்படும் வரை ஆட்சி பூலோக முழுமையும் செய்தருள்வாயாக" என்று நல்லாசி கூறி வாழ்த்துவர்.

முதல் நூல் இயற்றிய முனிவர் இராமபிரானின் குணத்தை குறிக்கும்காலை "பூர்வபாஷீ ராகவ:" என்ற பிரயோகத்தை கம்பர் தனக்கே உரிய பாணியில் விரிவாகவும் வினயத்தின் எல்லையை முட்டுமளவுக்கும் விவரித்திருப்பதில் கவியின் எளிமையும் பக்தியையும் காண்கிறோம்.



## தி.தி. தேவஸ்தானத்தாரின்

# ஸ்ரீபாலாஜி ஆரோக்ய வரபிரஸாதினி திட்டம்

பன்னெடுங்காலமாக, ஸ்ரீவேங்கடேஸ்வரசுவாமி நின்றவண்ணம் அருள் புரிந்திடும் திருமலையானது புகழ்பெற்ற ஒரு புனிதத்தலமாக விளங்கி வருகிறது. தங்களுடைய மனக்குறைகள் மறையவும், பிரச்சனைகள் தீரவும் நாள்தோறும் ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் திருமலைக்கு வந்த வண்ணம் இருக்கின்றனர்.

வாழ்க்கையில் இயற்கையின் கொடுமையால் பல வகைகளில் துயருறும் மனிதர்களுக்கு உதவிடும் வகையில் தி.தி. தேவஸ்தானம் பல திட்டங்களை மேற்கொண்டு வருகின்றது. இந்த வகையில் மருத்துவமனைகள், தொழுநோய் விடுதிகள், உடல் ஊனமுற்றோர் மறுவாழ்வு இல்லம், பார்வையற்றோர் இல்லம் என்று பல நற்பணி அமைப்புக்களை நடத்தி வருகின்றது. மேலும் பொது மக்களுக்கு நவீன மருத்துவ வசதிகள் அமைத்துத தரும் வகையில, புதுவை - ஜிப்மர், புதுடில்லி அகில இந்திய மருத்துவக்கழகம், சண்டிகார - முதுகலை மருத்துவமையம் ஆகியவற்றிற்கு நிகராக தி. தி. தேவஸ்தான வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படும் வகையில் மேலாண்மை ஏழுமலையான் திருவருளால் ஸ்ரீவேங்கடேஸ்வரா மருத்துவ ஆராய்ச்சி நிலையம் ஒன்றினை அண்மையில் திருப்பதியில் நிறுவி உள்ளது. அதிநவீன மருத்துவ சாதனங்களுடன் கூடிய இந்நிறுவனம் ஏழை மக்களுக்குப் பெரிதும் பயன்பட வேண்டுமென்பதே மேலாண்மையின் பெரு விருப்பமாகும். இந்த விருப்பம் பெருமளவில் வெற்றியடைய வேண்டுமென்றால் இரக்கமுள்ள மக்களின் முழு ஒத்துழைப்பும் தேவை. இதனை மனதிற்கொண்டு "ஸ்ரீபாலாஜி ஆரோக்யவரபிரஸாதினி" எனும் புதிய திட்டத்தை தி.தி. தேவஸ்தான மேலாண்மை புகுத்தியுள்ளது.

### திட்டச் சுருக்கம்

இத்திட்டத்திற்கெனப் பொதுமக்கள் ரூ. 1000/- அல்லது அதைப்போல பன்மடங்கு, / ரூ. 1 இலட்சம்,/ 5 இலட்சம்,/ 10 இலட்சம் என தி.தி. தேவஸ்தானத்திற்கு நன்கொடை அளித்தால், அந்தத் தொகைக்கு ஈடாகத் தன்பங்காக தேவஸ்தான மேலாண்மையும் நிதி ஒதுக்கி, மொத்த தொகையானது தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் முதலீடு செய்யப்படும். அத்தொகைக்கு வரும் வட்டித்தொகை மேற்படித் திட்டத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளப்படும்.

ரூ. 10 இலட்சம் அல்லது அதற்கு மேற்பட்டு நன்கொடை அளிக்கும் நபர்களின் பெயரைக் கொண்டு இவ் ஆராய்ச்சி நிறுவனத்தில் ஆராய்ச்சி பதவி ஒன்று அமைக்கப்படும்.

தனிநபர், குடும்பம், நிறுவனம், கழகம் பெயர்களில் நன்கொடை அளிக்கலாம்.

ரூ. 5 இலட்சம் மற்றும் அதற்கு மேறபட்டு நன்கொடை அளிக்கும் நபர்களின் பெயர்கள் மருத்துவமனை வரவேற்பு அரங்கில் காட்சியாககப்படும்.

பயன்பெறும் நோயாளிகளின அடையாள அட்டையில் நன்கொடையாளரின் பெயர் அச்சடிக்கப்படும்.

### மற்றைய பயன்களும், வசதிகளும்

இத்திட்டத்திற்கென வழங்கப்படும் நன்கொடைக்கு வருமானவரிச் சட்டப் பிரிவு 80 (G) கீழ் வருமானவரி விலக்கு அளிக்கப்படும.

நன்கொடையாளர்களின் குடும்ப நபர்களுக்கு கட்டண அறைகள் / குளிர்ச்சாதன அறைகள் மருததுவமனையில் ஒதுககப்படும்.

ரூ.. 5. இலட்சம் அல்லது அதற்கு மேற்பட்டு அளிககப்படும் நன்கொடையாளர்களின் பெயர்கள் கட்டண அறைகளுக்கு வைககப்படும்.

ரூ. 5 இலட்சம் நன்கொடை அளிக்கும் நபர்களின் பரிந்துரை பேரில் ஆண்டு ஒன்றுக்கு அறுவை சிகிச்சை வசதி ஒன்று அளிககப்படும்.

இத்திட்டத்திற்காக அளிக்கப்படும் நன்கொடை தொகையானது "Executive Officer, T.T.D. Tirupati" எனும் பெயரில் வங்கி காசோலை மூலம் செலுத்தப்பட்டு, அதனை "Director, Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati" எனும் முகவரிக்குக் கீழ்க்காணும் தகவல்களுடன் அனுப்புதல் வேண்டும்.

ரூ.1 இலட்சம் அல்லது அதற்கு மேற்பட்டுத் தொகை வழங்கும் நன்கொடையாளர்களின் குடும்ப நபர்களின் (மார்பளவு) புகைப்படங்களும் மற்றும் முழுமுகவரியும் அனுப்புதல் வேண்டும்.

வருமானவரி விலக்குச்சான்றிதழ் அளிக்கப்பட வேண்டியவரின் பெயர், முகவரி தகவல்களை அனுப்புதல் வேண்டும்.

**The Executive Officer, T.T. Devasthanams, Tirupati.**

அல்லது

**The Director, Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati.**

(தொடர் கட்டுரை)

# முமுட்சுப்படி

திரு. மாருதிதாஸன் - காஞ்சிபுரம்.

**மூலம் : 91**

"ஈச்வரன் தனக்கேயாயிருக்கும்; அசித்துப் பிறர்க்கேயாயிருக்கும்; ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்கும் என்று முற்பட்ட நினைவு; அங்ஙனன்றிக்கே, அசித்தைப்போலே தனக்கேயாக எனைக்கொள்ள வேணுமெனகிறது நமஸ்ஸால்",

**1) நமப்பதத்தால் ஏற்படும் நினைவுகளாக ஆசிரியர் கூறுவன யாவை?**



அ) பெருமான சுதந்தரத தனமையை இயலபாகக கொணடவன. எனவே எமபெருமான தனககே உரியவனாய இருபபவன.

ஆ) அசிதது (அறிவறற பொருள) ஞானமிலலாத ஒனறு. எனக்கு நான உரியன என்று நினைப்பதற்கும் இயலாத அசிதது மற்றவருக்கே உரிமையுடையதாயிருக்கும்.

இ) ஆனமாவானது தனககும் பிறருக்கும் பயன்படுவதாயிருக்கும் என்பதும் நமப்பதத்தின் பொருளை அறிவதற்கு முன்பு பிரணவத்தில் உண்டான நினைவுகளாம்.

ஈ) அப்படியில்லாமல "மற்றவருககே பயன்படும் அசிதத்தைப் போன்று, பெருமானுக்கே என்னைப் பயனாக்கிக கொள்ள வேண்டும்" என்பதும் நமப்பதத்தால் ஏற்படும் நினைவுகளாம்.

**2) நமப்பதத்தின் பொருளை உணர்வதற்கு முன்னே சேதனர்களுக்கு இருக்கக்கூடிய நினைவுகளாக ஆசிரியர் கூறுவன யாவை?**

தத்துவங்கள் மூன்று. அவை சிதது (அறிவுடையவன்) அசித்து (அறிவற்ற பொருள்) ஈசுவரன (பகவான்) என்பன.

இம்மூன்றனுள் இறைவன சுதந்தரத்தன்மையுடையவனாதலால், அவன் தனககே உரிமையுடையவனாயிருப்பன் என்றும்; அசித்தானது அறிவற்ற பொருளாதலால் அது மற்றவருககே உரிமையுடையதாயிருக்குமென்றும்; சேதனன் தனக்குத் தான் உரியனாகவும் பரமனுககும பாகவதர்களுககும் உரியனாகவும இருபபன் என்றும் நமப்பதத்தின் பொருளை உணர்தறகு

முன்னே இருக்கக்கூடிய நினைவுகளாம்.

3) *நமப்பதத்தின் பொருளை உணர்ந்ததற்குப் பின்னர் ஏற்படும் நினைவு யாது?*

பிறருக்கே பயன்படுதலை இயல்பாகக் கொண்டுள்ள அசித்தைப்போன்று, " உனக்கே நாம் ஆட்செய்வோம்" என்றபடித் தன்னைப் பகவானுக்கே பயன்படுத்திக் கொள்ளுமாறு சீவான்மா பகவானை வேண்டிக்கொள்ளும் நினைவைப் பெறுகிறது.

மூலம் : 92

"அதாவது, போக தசையில்

ஈச்வரனழிக்கும் போது நோக்க வேணும் என்று அழியாதொழிகை "

1) *இம்மூலம் கூறும் கருத்து யாது?*

91ஆம் மூலத்தின் ஈற்றடியில் "தனக்கேயாக எனைக்கொள்ள வேணுமென்கிறது நமஸ்ஸால்" என்று காணப்படும். இவ்வடியில் காணப்படும் 'தனக்கேயாக' என்பதனை விளக்குகிறது இந்த மூலம்.

2) *இம்மூலத்தின் பொருளை விளக்குக.*

பகவான் அடியவனோடு கலந்து மகிழும்போது, தன்னிடம் கொண்டுள்ள அன்பின் மிகுதியினால் பகவான் தன் நிலையிலிருந்தும் இறங்கி வருதலும் உண்டு.

அப்போது அடியவன் தன்னுடைய அடிமைத்தன்மையைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும். இதனால் பகவான் தன்னிடம் இன்பம் துய்த்தலுக்குச் சேதனன் தடையாக இருக்கக்கூடாது என்பதே இதன் தேறிய பொருளாகும்.

பகவானுக்கே ஆனந்தம் ஏற்படுமாறு தன்னை விநியோகப் படுத்திக் கொள்ளுதல் - அர்ப்பணித்துக்கொள்ளுதல் என்பது இதுவேயாம்.

3) *பகவான் தன்னைத்தானே அடியவனிடம் விநியோகப்படுத்திக் கொண்டு ஆனந்தம் பெற்றமைக்குச் சான்று தருக.*

மிக உயர்ந்த பக்திக்கு எடுத்துக்காட்டாக விளங்கியவர் குசேலர். இவரும் கண்ணபிரானும் இளமைக்காலத்தில் ஒரே குருவினிடம் ஒன்ருகப் பயின்றவர்கள். குசேலருக்கு மக்கள் பேறு மிகுதியால் வறுமை வந்து சேர்ந்தது.

எனவே, தன் மனைவியின் தூண்டுதலால் குசேலர் கண்ணன் மாளிகைக்குச் சென்ருர். குசேலர் வருகையைக் காவலர் கண்ணபிரானுக்கு அறிவித்தனர்.

கண்ணபிரான் ஓடோடி வந்தார். தன் நெற்றியில் அணிந்திருந்த திலகம் தரையில் படுமாறு குசேலரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்; அன்புடன் அவரை உள்ளே அழைத்துச் சென்ருர். குசேலரின் திருவடிகளைக் கண்ணபிரான் தன் மடிமது வைத்துக்கொண்டார்.

"நடந்த கால்கள் நொந்தனவோ!" என்று பரிவுடன் பகர்ந்தவாறே குசேலரின் திருவடிகளை மெல்லப்பிடித்துவிட்டார் கண்ணபிரான்! கண்ணபிரான் செய்யும் உபசாரங்களுக்கெல்லாம் குசேலர் இசைந்திருந்தார்.

குசேலரின் இந்த நிலைதான், தன்னை விநியோகித்துச் கொள்ளும் பகவானின் ஆனந்தத்தைக்கெடுக்காமல் இருக்கும் சேதனனின் நிலையாகும்.

ஆனால் அதே சமயம் சேதனன் தன்னை முழுவதுமாகப் பகவானுக்கே அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும்.

கண்ணன் செய்த உபசாரங்களுக்கெல்லாம் குசேலர் மகிழ்ச்சி அடையாமல் ஒன்றுமே அறியாதவராக மெய்ம்மறந்திருந்தாராம்!

இதுதான் அடியவனின் தற்போதம் இழந்த நிலை!

"வழிநடந் திளைத்த வேஇம்
மலரடி இரண்டும்? என்று
கழிமகிழ் சிறப்ப மெல்ல வருடினான்
கமலக் கண்ணன்;
பழியில்பல் உபசா ரங்கள் பண்ணவும்
தெரியா னாகி
ஒழிவறு தவக்கு சேலன்
ஒனறும்பே சாதி ருந்தான்"

இப்பாடலில் இம்மூலத்தின் கருத்தினைக் கண்டு இன்புறலாம்.

மூலம் : 93

"அழிக்கைக்கு ஹேது கீழே சொல்லிற்று; மேலுஞ் சொல்லும்."

1) *தானே வலிய வந்து சேதனனின் இன்பத்தின் பொருட்டுப் பகவான் தன்னைப் பரிமாறிக் கொள்ளும் போது, சேதனன் பணிவுடன் பின்வாங்கிக் கொள்ள வேண்டும் என்பதன் காரணம் யாது?*

பகவானுக்கு அடிமையாய் இருந்து தொண்டு செய்தலே ஆன்ம சொரூபம் என்பதனைப் பிரணவம் கூறுகிறது.

நாராயண பதத்திலுள்ள நான்காம் வேற்றுமையில், சேதனன் இறைவனுக்குத் தொண்டு செய்வதே பயன் என்று கூறியுள்ளது.

எனவே, தன்னுடைய அடிமைத் தன்மையைத் தான காத்துக்கொள்ள வேண்டும் என்னும் எண்ணம் சேதனனுக்கு ஏற்படுகிறது.

பகவானுக்குத் தான கைங்கரயம் செய்வதே முறையாய் இருக்க, பகவான் தன்னிடம் தானாகவே வந்து தனக்குச் செய்யும் உபசாரங்களை ஏற்றுக் கொள்வது முறையன்று என்று உணர்வதால் தான் தன் பணிவைக் காட்டிப் பகவானுடைய இன்ப அன்புச் செயல்களை அழிக்க இடமேற்படுகிறது.

## மூலம் : 94

"இந்நினைவு பிறந்த போதே க்ருத க்ருத்யன்; இந்நினைவு இல்லாதபோது எல்லா துஷ்க்ருதங்களும் க்ருதம்; இந்நினைவிலே எல்லா ஸுக்ருதங்களும் உண்டு; இதின்றிக்கே இருக்கப் பண்ணும் யஜ்ஞாதிகளும் ப்ராயச் சித்தாதிகளும் நிஷ்ப்ரயோஜனங்கள்; இது தன்னாலே எல்லாப் பாபங்களும் போம்; எல்லாப் பலன்களுமுண்டாம்."

1) **"இந்நினைவு பிறந்த போதே க்ருதக்ருத்யன்" என்பதனை விளக்குக.**

'இந்நினைவு' என்பது அத்தியந்த பாரதந்திரிய ஞானம் உண்டாகும் போது என்பதனைக் குறிக்கும்.

இறைவனுடன் இரண்டறக் கலந்து தன்னைப் பகவானுக்கே அர்ப்பணித்துக் கொள்ளும் நினைவு சேதனனுக்கு எப்பொழுது ஏறபடுகிறதோ, அப்பொழுதே சேதனன தன நன மைக்காகத தான செய்யவேண்டிய எல்லா நறகாரியங்களையும செயது முடித்தவனாவான எனபது இதன் பொருளாகும்.

2) **"சொரூப பாரதந்திரிய ஞானமில்லாத போது ஏற்படும் தீமையாது?**

"இந்நினைவில்லாத போது எல்லா துஷக்ருதங்களும் க்ருதம்" என்கிறார் ஆசிரியர்.

தான் ஆண்டவனுக்கே உரியவன் என்னும் ஞானமில்லாத போது, எந்தத் தீமையையும் அவன் செய்யாமல் இருந்தாலும் எல்லாத் தீய செயல்களையும் செய்தவனாகவே அவன் கருதப்படுவான்.

ஏனெனில், ஆண்டவனுக்கே உரித்தான ஆன்மாவாகிய பொருளை இவன் தன்னுடையதே என்று கருதுவதால், ஆண்டவனையே களவு செய்தவனாகிறான். இதனால் இவனுக்குப் பாரதந்திரிய ஞானம் நீங்கிச் சுதந்தர ஞானம் தோன்றுகிறது.

தான் ஆண்டவனுக்கே உரியவன் என்பதனை மறந்து, தான் தனக்கே உரியவன் என்று எண்ணுகிறான். எனவே, இவன் எல்லாப் பாபங்களையும் செய்தவனாகவே எண்ணப்படும் தீமையை அடைகிறான்.

3) **"பாரதந்திரிய நினைவால் ஏற்படும் நன்மை யாது?**

"இந்நினைவிலே எல்லா ஸுக்ருதங்களுமுண்டு" என்று பாரதந்திரிய நினைவால் ஏற்படும் நன்மையைக் கூறுகிறார் ஆசிரியர்.

பாரதந்திரிய நினைவு உண்டாகும போது எல்லா நன்மைகளும் ஏற்படும.

தானதருமங்கள செயவதால இறைவனிடமிருந்து எத்தகைய கருணையை - முக உல்லாசததைச சேதனன பெறமுடியுமோ அத்தகைய முக உலலாசத்தை இந்தப் பாரதநதிரிய ஞானததாலேயே பெற்றுவிடமுடியும். பாரதந்திரிய நிலையில் சேதனன் செய்யும் புண்ணிய கருமங்கள அனைத்தும கைங்கரியத்தில் சேருமேயல்லாமல் உபாயத்தில் சேரா.

எனவேதான், தான் ஆண்டவனுக்கே உரியன் என்று எண்ணுகிற எண்ணம் ஒன்றினாலேயே எல்லா நன்மைகளையும் பெற்றுவிட முடியும் என்கிறார் ஆசிரியர்.

4) **"பாரதந்திரிய ஞானம் இல்லாதவன் செய்யும் செயல்கள் - பற்றி ஆசிரியர் விளக்குவன யாவை?**

சேதனனுக்குப் பாரதந்திரிய ஞானம் இருக்கும்போதுதான் பகவான் மகிழ்ச்சியடைகிறான். எனவே, பாரதந்திரிய நினைவே பகவானின் உவப்புக்கேற்ற உறுப்பாக அமைகிறது.

இந்நினைவு இல்லாதபோது, பகவானின் உவப்புக்குக் காரணமான உறுப்புக்கள் முதலானவைகளும், தான் இதுவரை செய்துவிட்ட பாவங்களுக்குப் பரிகாரமாகச் செய்கிற விரதம் முதலான செயல்களும் பயனற்றுப் போகின்றன என்பதனையே,

'இதின்றிக்கே இருக்கப்பண்ணும் யஜ்ஞாதிகளும் ப்ராயச் சித்தாதிகளும் நிஷ்ப்ரயோஜநங்கள்' என்கிறார் ஆசிரியர்.

**5) "பாரதந்திரிய நினைவு உண்டாவதனால் ஏற்படும் பலன்கள் பற்றி ஆசிரியர் கூறுவன யாவை?**

"இது தன்னாலே எல்லாப் பாபங்களும் போம், எல்லாப் பலங்களும் உண்டாம்" என்கிறார் ஆசிரியர்.

பாரதந்திரிய எண்ணம் ஏற்பட்ட உடனேயே இறைவன் சேதனனுக்கு அருள்புரியத் தொடங்குகிறான். இறைவனால் வெறுக்கப்படும் எல்லாப் பாபங்களும் சேதனனை விட்டு நீங்குகின்றன. இவனுக்குச் செய்ய வேண்டியவற்றையெல்லாம் ஆய்ந்து ஆய்ந்து மேலும் மேலும் இறைவன் உதவி புரிகிறான். இதனால் இவனுக்கு ஏற்படும் எல்லாத் துன்பங்களும் இவனைவிட்டு நீங்குகின்றன. இறைவனுக்குக் கைங்கர்யம் செய்யும் பலனையும் அடைகிறான்.

பாபங்கள் யாவும் நீங்கப் பெற்றுப் பயன்கள் அனைத்தையும் சேதனன் பெறுவதற்குப் பாரதந்திரிய நினைவே காரணமாகிறது என்பதனை ஆசிரியர் அழகாக விளக்குகிறார்.

**6) "நமப்பதத்தின் பொருளாகக் கூறியுள்ளவற்றைத் தொகுத்து வரைக.**

78 முதல் 94 வரையுள்ள மூலங்களில் நமப்பதத்தின் பொருளை ஆசிரியர் விளக்குகிறார்.

'நம: என்பதில் ந, ம: என்னும் இரு பதங்கள் உள்ளன. இவற்றுள் ம: என்பது 'தனக்கு உரியன்' என்பதைத் தவிர்க்கிறது. எனவே, 'தனக்குத்தான் உரியன அல்லன்' என்னும் பொருளை நமப்பதம் தெரிவிக்கிறது.

தனக்கும் பிறருக்கும் உரித்தன்று என்பதைத் தெரிவிக்கும் உகாரத்தை விரிப்பதாக இந்த மப்பதம் இருப்பினும், தனக்குத் தான் உரியன் அல்லன் என்பதையே இது முக்கியமாக விவரிக்கிறது.

இப்பதம் சில விரோதிகளைப் போக்குகிறது. சொரூப விரோதி, உபாய விரோதி, ப்ராப்ய விரோதி எனப்படும் இம்மூன்று விரோதிகளும் நீங்குதற்குச் சேதனன் குறிப்பிட்ட சில நினைவுகளைக் கொள்ளுதல் வேண்டும்.

ம: என்பது சொரூப நாசம், நம: என்பது சொரூப உய்வு, இப்பதம் சொரூபத்தையும் உபாயத்தையும் பயனையும் காட்டும். இதற்குச் சான்றாக ஆழ்வார்கள் பாசுரங்கள் பல உள்ளன.

இந்நமப்பதத்தில் பாகவத சேஷத்வமும் அடங்கியுள்ளது. இப்பாகவத சேஷத்வம் அகாரத்தில் சொல்லப்படுகிறதென்று சிலரும், உகாரத்தில் சொல்லப்படுகிறதென்று சிலரும் சொல்லுவார்கள்.

சுதந்தரனான இறைவன் தனக்கே உரியவனாயும், பரதந்த்திரமான அசித்து பிறருக்கே உரித்தானதாயும், ஆன்மா தனக்கும் பிறருக்கும் பொதுவானதாயும் இருக்கும் என்பது இந்நமப்பதத்துக்கு முன்பிருந்த நினைவு.

அங்ஙனமின்றி, அசித்தைப் போன்று பகவானுக்கே எனைக் கொள்ள வேண்டும் என்பது இந்நமப்பதத்தில் பிறந்த எண்ணம். பகவான் இறங்கி வந்து சேதனனோடு பரிமாறுங்கால், தன் சேஷத்வ சொரூபத்தைத் தான் நோக்கிக் கொள்ள வேண்டும் என்று எண்ணி அவனுடைய போகத்தை அழித்தல் கூடாது.

இங்ஙனம் அழிப்பதற்குக் காரணம் முன்னுள்ள பிரணவத்தில் சொல்லியது மட்டுமின்றி, பின்னுள்ள சதுர்த்தியிலும் சொல்லப்பட்டுள்ளது.

பாரதந்திரிய நினைவு ஏற்பட்டபோதே தன் நன்மைக்கு அதிகாரமாய உள்ளவற்றையெல்லாம் செய்து முடித்தவனாவான். இந்நினைவில்லாதபோது தீச்செயல்கள் பல இவன் செய்ததாகவே முடியும். இந்நினைவில் எல்லா நலன்களும் உண்டாகும்.

இந்நினைவின்றிச் செய்யப்படும் புண்ணிய பாவமாகிய கன்மங்கள் பயனற்றவையே! எனவே, இது எல்லாப் பாபங்களையும் போக்கி, எல்லாப் பயன்களையும் தரும்.'

என்னும் கருத்துக்கள் நமப்பதத்தின் பொருளாகக் கூறப்பட்டுள்ளன.

(தொடரும்)

* * *

## விண்ணப்பம்

'ஸப்தகிரி' இதழுக்குக் கதை, கட்டுரைகள், துணுக்குகள் அனுப்புமாறு எழுத்தாளர் பெருமக்களை மேலாண்மை கேட்டுக்கொள்கிறது. பிரசுரிக்கப்படும் கதை, கட்டுரைகளுக்கு மட்டுமே சன்மானத்தொகை வழங்கப்படும்.

**ஆசிரியர்.**

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

உமைப்ரியன்

## ஐந்தாம் அத்தியாயம்

## ஸந்யாஸ யோகம்

### அர்ச்சுனன் கூறியது

ஸந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண
புனர்யோகம் ச சம்ஸஸி ।
யச்ச்ரேய ஏதயோரேகம் தன்மே
ப்ரூஹி ஸுநிஸ்சிதம் ।। (1)

"கிருஷ்ணா, வினையை (கர்மத்தை) கைவிடவும் கூறுகிறாய். பிறகு வினையை மேற்கொள் என்றும் அறிவுறுத்துகின்றாய். இந்த இரண்டு வழியில் எது சிறந்தது என்பதை எனக்குக் கூறுவாயாக"

(நான்காம் அத்தியாயத்தில் இடைப்பகுதியில், வினையை விடுமாறும், பிறகு அவ் அத்தியாயத்தின் இறுதியில் வினையை பின்பற்றுமாறும் பகவான் அரச்சுனனுக்கு அறிவுரை கூறுகின்றான். இதனால் அரச்சுனனுக்குக் குழப்பமும், சந்தேகமும் தோன்றுகின்றன. அதனால பகவானிடம் அரச்சுனன் விளக்கம் கேட்கிறான்.)

### பகவான் கூறியது

ஸந்யாஸ: கர்மயோகஸ்ச
நி:ச்ரேயஸகராவுபௌ ।
தயோஸ்து கர்மஸந்யாஸாத்கர்ம
யோகோ விசிஷ்யதே ।। (2)

"(வினையை விடும்படியான) கர்ம ஸந்யாசம், (வினை ஆற்றும்படியான) கர்மயோகம் ஆகிய இரண்டும் சிறப்புக்குரியன. ஆனாலும் கர்ம ஸந்யாஸத்தைவிட கர்ம யோகமே மிகவும் மேலானது."

(பனி படர்ந்த இமய மலையில் இருக்கும் பத்ரிகாசரம் எனும் திருத்தலத்திற்கு விமானம் மூலமும் செல்லலாம். நடந்தும் செல்லலாம். விமானத்தில செல்வதால் எளிதில் அந்த இடத்தை அடையலாம். ஆனால் நடந்து செல்லும் போது, வழியில் பலதரப்பட்ட மக்களின் நட்பு, நடப்பதால உடல்ஆரோக்யம், இமயமலையின் இயற்கை அழகினை நேரிடையாக உணர்ந்து பெறப்படும் அனுபவம் ஒருவருக்குக் கிடைக்கப் பெறும். ஆகவே விமானத்தில செல்வதற்கு ஒப்பானது கர்ம ஸந்யாஸம். நடந்து செல்வதற்கு ஈடானது கர்மயோகம். இரண்டாவது முறையால மனிதனின் மனமும், உடலும் பக்குவப்படுகிறது. உடலின் பயன் உழைப்பதேயாகும். உழைப்பே உயர்வைத் தரும்.)

ஜ்ஞேய: ஸ நித்யஸந்யாஸீ யோ ந
த்வேஷ்டி ந காங்க்ஷதி ।
நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ
ஸுகம் பந்தாத்ப்ரமுச்யதே ।। (3)

"அகன்ற தோள்களை உடையவனே! (வீரனே) விருப்பு வெறுப்பு இல்லாதவனே நித்ய துறவி(ஸந்யாஸி)யாகக் கருதப் படுகிறான். ஏனென்றால், (அதுபோன்ற) இருநிலைகளை இல்லாதவனே பற்று எனும் தளைகளை விடுத்து எளிதில தன்னை விடுவித்துக் கொள்பவனாகின்றான்."

(மனிதனைக் கட்டுப்படுத்துவது அவன் செய்யும் வினையல்ல. பணி செய்யாது, சோம்பேறியாக ஒருவன் இருப்பானாகில் அவன் உடலாலும் உள்ளத்தாலும், இன்பத்தையும் துன்பத்தையும் என்றென்றும் அனுபவிக்கவே விரும்பும் மனிதனா



கவே இருப்பான். அதே நேரத்து கடமை உணர்வில் நேர்மை வழியில் விருப்பம், வெறுப்பு என்ற உணர்வுகளுக்கு ஆட்படாது, தன் பணிகளை செய்யும் துறவியானவன், எந்தப் பற்றிலிருந்தும் எந்த ஆசையிலிருந்தும் துன்பத்திலிருந்தும் எளிதில் தன்னை விடுவித்துக் கொள்ளும் ஆற்றல் உடையவனாவான். அவனுடைய மனமும், அறிவும் குழப்பத்திற்கோ, தவறுகளுக்கோ இடம் கொடுப்பதில்லை. இந்த நிலையில் அவன் நாளும் ஒரு துறவியாகவே வாழ்கின்றான். மனத்தளவில் துறவியாக இருப்பவனுக்கு முக்தி எளிதில் வந்தமைகிறது.)

**ஸாங்க்யயோகௌ ப்ருதக்பாலா:**
**ப்ரவதந்தி ந பண்டிதா: ।**
**ஏகமப்யாஸ்தித: ஸம்யகுபயோர்**
**விந்ததே பலம் ।। (4)**

"சாங்க்யமும் (வினை ஆற்றுதலை கைவிடுதல்) யோகமும் வேறு வேறு என்று சிறுமதியுடையோர் கூறுவார்ககள். அறிவாளிகள் அவ்வாறு கூறமாட்டார்கள். இந்த இரண்டினுள் ஒன்றை உறுதியாகப் பின்பற்றுவன் இரண்டினுடைய பயன்களையும் பெறுவான்."

(முன் செய்யுளில் கூறிய கர்ம ஸந்யாசத்தையும் கர்மயோகத்தையும் வேறு வேறு என்று சொல்லுபவர்கள் இச்செயுளில் அறிவற்றவர்களாகக் கூறப்படுகிறார்கள். ஏன் என்றால் அவர்களது செய்கை குழப்பத்திற்கும் தவறுகளுக்கு இட்டுச் செல்வதால்.)

**யத்ஸாங்க்யை: ப்ராப்யதே ஸ்தானம்**
**தத்யோகைரபி கம்யதே ।**
**ஏகம் ஸாங்க்யம் ச யோகம் ச ய:**
**பச்யதி ஸ பச்யதி ।। (5)**

"ஸாங்க்யத்தைப் பின்பற்றுபவர்களும், (கர்ம) யோகத்தைப் பின்பற்றுபவர்களும் ஒரேவிதமான பேற்றையே (சிறப்பையே, பயனையே) அடைகின்றனர். ஸாங்க்யத்தையும், யோகத்தையும் ஒன்றாகப் பார்ப்பவர்கள் சத்தியத்தையே பார்க்கின்றனர்."

(அறிவின் துணையால் இயற்கையின் இயல்பை ஆராய்வது சாங்க்யம் ஆகும். இதுவே ஞான உயர்வுக்கு வழிகாட்டுகிறது. யோகம் என்பது வினை ஆற்றுவதன் மூலம் இயற்கையுடன் தொடர்பு கொள்ளுவதாகும். எந்தவிதமான பற்றும் இல்லாது, வினை கொள்பவனுக்கு இயற்கையானது பல வகைகளில் துணை நிற்கின்றது. இதனால், அவனுடைய அறிவும், ஆற்றலும், ஆனந்தமும் பெருகவே செய்கின்றது. தளைகளிலிருந்து விடுபட்டவனால்தான் முக்தி எனும் பேற்றை அடையமுடியும். ஆகவே, சாங்க்யமும், யோகமும் இரு பாதைகளாக இருக்கின்றன. இதனை அறிபவனே உண்மையை உணர்ந்தவனாவான்.)

**ஸந்யாஸஸ்து மஹாபாஹோ**
**து:கமாப்துமயோகத: ।**
**யோகயுக்தோ முனிர்ப்ரஹ்ம**
**நசிரேணாதிகச்சதி ।। (6)**

"அகன்ற தோள்களை உடையவனே! கர்ம யோகத்தை மேற்கொள்ளாது கர்ம ஸந்யாஸம் பெறுவது என்பது எளிதல்ல. கர்ம யோகம் புரியும் முனிவன் விரைவாக பிரம்மத்தை அடைகிறான்."

(இச்செய்யுளில் கர்ம யோகத்தின் சிறப்பு பேசப்படுகிறது. அதைப் பின்பற்றுபவர்களுக்கு மேலான முக்தி எனும் பதவி எளிதாக வந்தமைவதாக உறுதி கூறப்படுகிறது. பிஞ்சில் பழுத்தது இனிக்காது. அதே நேரத்து, மரத்திலுள்ள மாங்காய் ஒன்று நன்கு முதிர்ந்து அதனுடைய இயற்கையான சுவையை தன்னுள் வாங்கிக் கொண்டு, நன்கு பழுத்துப் பின் மரத்திலிருந்து விழும்போது, அதனைச் சுவைகக்கும் போது அதன் சுவையே தனியாகும். இந்தப் பக்குவம் மனிதனிடமும் இருக்க வேண்டும். தனக்குரிய வினைகளை ஆற்றி, இயற்கைக் காட்டும் உண்மைகளை அனுபவமாகக் கொணடு வாழும் போது ஞானம் என்பது அவனுக்கு எளிதாக வந்தமைகிறது. அப்போதுதான் அந்த பிரம்மம் எனும் பேரொளியை அவன காணமுடியும். இதுவே முறையான கரம ஸந்யாஸம் என்று கூறப்படுகிறது. இம்முறைதான் மனிதர்களுக்குச் சிறந்த மார்க்கமுமாகும்.)

**யோகயுக்தோ விசுத்தாத்மா**
**விஜிதாத்மா ஜிதேந்த்ரிய: ।**
**ஸர்வபூதாத்மபூதாத்மா**
**குர்வன்னபி ந லிப்யதே ।। (7)**

"கர்ம யோகத்தில் நாட்டமுள்ளவன், தெளிந்த மனத்தை உடையவன், உடலை (உடலின் பங்களை) வெற்றி கொண்டவன், ஐம்பொறிகளை அடக்கியன், தன்னுள் இருக்கும் ஆத்மாவே மற்றைய உயிர்களுக்கும் ஆத்மா என்று நினைப்பவன் (தன் ஆத்மாவில் மற்றைய ஆத்மாக்களைக் காண்பவன்) ஆகியோர் வினைகள் (கர்மா) செய்தாலும், அவற்றால் அவர்கள் கட்டப்படுவதில்லை. (அவற்றிற்கு அடிமையாவதில்லை)"

(சாதாரண மனிதர்களாகிய ஜீவர்கள், வினைகள் ஆற்

றும்போது, அவற்றால் விளையும் இன்ப துன்பங்களுக்கு ஆளாகின்றனர். அவற்றால் அவர்கள் பாதிக்கப்படும் அளவு, துன்பத்திற்கே தங்களைத் தாங்களே இட்டுச்செல்கின்றனர். அதே சமயத்தில் வினையாற்றும் யோகி அல்லது துறவியானவன் எவ்வளவு வினைகள் ஆற்றுகின்றானோ (கர்மம் செய்கின்றானோ) அந்த அளவு அவ்வினைகளின் பந்தத்திலிருந்து - பற்றிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ளும் நிலையை, பக்குவத்தைப் பெறுகின்றான். ஏன் என்றால், யோகியானவன், வினையாற்றும் போது எந்த வித எதிர்பார்ப்புகளையும் மனதில் கொண்டு செய்வதில்லை. அதாவது ஆசையற்று, பற்றற்று செய்கின்றான். அதனால் அவன் சொல்லும் வழியில் நினைக்கும் வகையில் அவன் உடலும், ஐம்பொறிகளும் அவனுக்கு உட்பட்டு நடக்கின்றன. இந்த அடக்கியாளும் திறத்தால் அவன் ஞானம் எனும் பேரறிவை காலக்கிரமத்தில் பெறுகின்றான். அந்த நிலையில் எல்லா உயிர்களிடத்தும், தன்னிடத்தும் உள்ள பரமாத்மா என்பவன் ஒருவனே என்ற உண்மையை - அனுபவத்தை அறிகின்றான். ஆகவே வினைப் பற்று அகலுவதால் வினைப்பயிற்சியானது வினைத்துறவுக்கு வழிகாட்டுகிறது.)

நைவ இஞ்சித்கரோமீதி யுக்தோ
மன்யேத தத்வவித் ।
பச்யஞ் ச்ருண்வன் ஸ்ப்ருசஞ்
ஜிக்ரன்னச்னன்
சச்சன் ஸ்வபஞ் ச்வஸன் ॥ (8)

தத்துவம் அறிந்த யோகியானவன் பார்ப்பதும், கேட்பதும், தொடுவதும், முகரவதும், அருந்துவதும், நடப்பதும், தூங்குவதும், சுவாசிப்பதும் ..... (இச் செய்யுளின் கருத்து அடுத்தச் செய்யுளிலும் தொடர்கிறது.)

ப்ரலபன் விஸ்ருஜன் க்ருஹ்ணன்னுன்
மிஷந் நிமிஷன்னபி ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேஷு
வர்தந்த இதி தாரயன ॥ (9)

"...பேசுவதும், கழிப்பதும், பிடிப்பதும், கண் திறப்பதும், கண் மூடுவதும் ஆகிய ஐம்பொறி உணர்வுகளும், செயல்களும், புலன்களின், உறுப்புகளின் பயனாக நடக்கின்றன என்பதே உண்மை என்று கொண்டு "நான் எதனையும் செய்வதில்லை" என்றே நினைத்திடுவான்."

(காலை எழுந்ததும் மனிதன் தன் அன்றாடத்தேவைகளுக்காகத் தன் உடல் கொண்டு உழைக்க வேண்டியிருக்கிறது. இதுபோது செயல்கள் அனைத்தும் இந்த உடல் தான் செய்கின்றது. 'என்னுள் இருக்கும் ஆத்மாவுக்கு செயல் இல்லை' என்று நினைக்கும் ஒருவனுக்கு தான் செய்யும் செயல்களுக்கு 'நான்தான் செய்கிறேன், நான்தான் காரணம்' என்ற எண்ணமில்லை. ஆகவே ஆத்மானுபவத்தில் மூழ்கியிருப்பவன் ஞானேந்திரியங்கள் (உடம்பு, கண், செவி, மூக்கு, நாக்கு), கர்மேந்திரியங்கள் (வாய், கை, கால், சிறுநீர் துவாரம், மலஜல துவாரம் பிராணன் (உயிர்) ஆகியற்றின் வினைகளைத் தன் செயல்களாகக் கருதமாட்டான்.)

ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம்
த்யக்த்வா கரோதி ய: ।
லிப்யதே ந ஸ பாபேன
பத்மபத்ரமிவாம்பஸா ॥ (10)

"பிரம்மத்தை சரணடைந்து, பற்றுகளை விடடொழித்து, வினைகளை மேற்கொள்பவன், தண்ணீரில் தாமரையிலையைப் போன்று பாவங்களால் பந்தப்படுவதில்லை (தாக்கப்படுவதில்லை)"

(இந்த தாமரை இலையின் இயல்புக்கு நிகராகத் துறவியின் நிலை பேசப்படுகிறது. இவ்வாறு தாமரையானது தண்ணீரில் தோன்றி வளர்ந்து, மலர்ந்தாலும் நீரால் அத்தாமரை எவ்வாறு நனைவதில்லையோ அவ்வாறே பல நிலைகளில் வினையாற்றினாலும், துறவியானவன் அவ்வினைப் பற்றினால் தாக்கப்படுவதில்லை).

காயேன மனஸா புத்த்யா
கேவலைரிந்த்ரியைரபி ।
யோகின: கர்ம குர்வந்தி ஸங்கம்
த்யக்த்வாத்மசுத்தயே ॥ (11)

"துறவிகள் பற்றை விடுத்து, ஆத்ம சுத்திககாக (தூய்மையான ஆத்மாவுக்காக) வெறும் உடம்பாலும், மனத்தாலும், அறிவாலும், ஐம்பொறிகளாலும் வினை ஆற்றுகின்றனர்."

(துறவிகளை யான் எனது என்ற மமதை உணர்வுகளோ, சுயநல எண்ணங்களோ சிறிதும் நெருங்கா. அதனால் உள்ளிருந்து உணர்வுகளை எழுப்பக்கூடிய உறுப்புக்களோ வெளியிலிருந்து இயங்கக்கூடிய உறுப்புக்களோ எந்தவிதச் சலனமின்றி அவர்கள் உள்ளத்தில் செயல்படுகின்றன. அதனால் துன்பங்களுக்கு அழைத்துச் செல்லும் 'ஆசை' எனும் உணர்ச்சிக்கு வாய்ப்பில்லாது போய்விடுகிறது. அதுபோது அவர்களது சித்தம், ஆத்மா தெளிவான இயல்பைப் பெறுகிறது.)

*யுக்த: கர்மபலம் த்யக்த்வா*
*சாந்திமாப்னோதி நைஷ்டிகீம் ।*
*அயுக்த: காமகாரேண பலே*
*ஸக்தோ நிபத்யதே ।। (12)*

"துறவியானவர் வினைப்பயன்களில் பற்று இல்லாது, நிஷ்டையில் உருவாகும் அமைதியைப் பெறுகிறான். யோகத்தைப் பின்பற்றாதவன் ஆசையினால் தாக்குண்டு கட்டப்பட்டவனாகின்றான்."

(வினை செய்வது என்பது துறவிகளும் சம்சாரிகளும் மேற்கொள்ள வேண்டிய ஒன்றாகும். ஆனால் துறவியானவன் வினையாற்றும் போது, 'நான் ஒன்றும் செய்வதில்லை எல்லாம் கடவுள் செயல்" என்ற எண்ணமே துறவிக்கு உறுதியாகின்றது. நிஷ்டையாகின்றது. இதனால் துறவி கவலைக்கு உட்படுவதில்லை. அவருடைய அமைதி பெருகுகின்றது. அறிவு பிரகாசிக்கின்றது. ஞானம் உதிக்கின்றது. ஆனால் அதே நேரத்து சம்சாரியானவன், ஆசையின் காரணமாகச் செய்யும் பணிகளைத் தனக்காகச் செய்கின்றான். 'நான் செய்கிறேன்' என்று கூறுகின்றான். அதனால் செய்யும் வினைகளின் பயன்களால் குழப்பம், ஏமாற்றம், கோபம், துன்பம் ஆகியவற்றால் தாக்குண்டுத் துன்பப்படுகிறான்.)

*ஸர்வகர்மாணி மனஸா ஸந்யஸ்*
*யாஸ்தே ஸுகம் வசீ ।*
*நவத்வாரே புரே தேஹீ நைவ*
*குர்வன்ன காரயன் ।। (13)*

"தன்னைக் கட்டுப்படுத்திய (ஐம்புலன் இன்பங்களைக் கட்டுப்படுத்திய) தேகியானவன் வினைகள் யாவற்றையும் தன் மதிநுட்பத்தால் விலக்கிவிட்டு, எதையும் செய்யாதவனாக, எதனையும் செய்விக்காதவனாக, ஒன்பது வாயில்களைஉடைய உடம்பில் சுகமாக அமர்ந்திருக்கிறான்."

(இச்செய்யுளில் வினைப்பற்றில்லாத ஆத்மாவின் நிலை கூறப்படுகிறது. வினைகள் பல வகை உண்டு. நாளும் செய்யவேண்டிய வினை. அதாவது நித்திய கர்மம். உறங்குவதும், குளிப்பதும், உண்பதும், வழிபடுவதும், நாளும் மனிதன் மேற்கொள்ளும் வினைகளாகும். ஏகாதசி, ஸ்ரீராம நவமி, சதுர்த்தி, சிவராத்திரி போன்ற சமய திருநாட்களில் மேற்கொள்ள வேண்டிய வினைகளை நைமித்திக கர்மம் என்று கூறுவர். ஒரு குறிப்பிட்ட பலனுக்காக மேற்கொள்ளவேண்டிய வினையை காமிய கர்மம் என்று சொல்வர். செய்யக்கூடாத, விலக்கப்பட்ட வினையை நிஷித்த கர்மம் என்று பேசுவர். ஆசை மற்றும் கர்வம் இல்லாத துறவியானவன் இந்த நான்கு வினைகளால் எந்தவித தாக்கமும், பாதிப்பும் அடைவதில்லை. அத்தகைய துறவியின் ஆத்மாவானது ஒன்பது ஓட்டைகளை உடைய இந்த உடலுக்குள் ஓர் அரசனாக வாழ்கிறது.)

*ந கர்த்ருத்வம் ந கர்மாணி*
*லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு: ।*
*ந கர்மபல ஸம்யோகம்*
*ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே ।। (14)*

"வினைக்குரிய தலைமை, வினையாற்றுதல், அவ்வினையினால் பயன் அடைதல் ஆகியவற்றை இந்த உலகத்திற்காக கடவுள் ஏற்படுத்தவில்லை. இயற்கையே இவ்வாறு ஏற்படுத்தியுள்ளது."

(இயற்கையின் உந்துதலால் வினைகள் நடைபெறுகின்றன. ஆனால் தான் தான் அவ்வினைகளை செய்வதாக மனிதன் தன் அறியாமையின் காரணமாக எண்ணிக்கொள்கிறான். அப்போது, அவ்வினைப் பயன்களையும் தானே பெறுவதாகவும் எண்ணுகின்றான். ஆனால் வினைக்கும், வினைப்பயனுக்கும், வினைகளின் தலைமைக்கும் அவ் இயற்கையே முழுப்பொறுப்பாகும்.)

*நாதத்தே கஸ்யசித்பாபம் ந*
*சைவ ஸுக்ருதம் விபு: ।*
*அக்ஞானேனாவ்ருதம் ஞானம்*
*தேன முஹ்யந்தி ஜந்தவ: ।। (15)*

"யாருடைய பாவ-புண்ணியங்களையும் கடவுள் (பரமாத்மா) பொருட்படுத்துவதில்லை. பேரறிவு (ஞானம்) அறியாமையால் (அக்ஞானத்தால்) சூழப்பட்டிருக்கிறது. அதனால் உயிர்கள் (ஜீவாத்மாக்கள்) மயக்கத்தில் உள்ளன."

(நிலம், நீர், காற்று, நெருப்பு ஆகிய நான்கு பூதங்களின் தன்மைகள் ஐந்தாவது பூதமான ஆகாயத்தின் தன்மையை எந்த நிலையிலும் பாதிக்காது. அதேபோன்று இயற்கையின் தாக்குதல்கள் அப்பரமாத்மாவை ஒன்றும் செய்யாது. அதாவது பரமாத்மா இவ் இயற்கையின் நன்மை, தீமைகளை பொருட்படுத்துவதில்லை. ஏற்கும் பாத்திரத்தின் வடிவங்களுக்கேற்ப அவற்றிலுள்ள நீரானது அவ்வவ் வடிவங்களைப் பெறுகின்றது. ஆனால் நீர் வடிவமற்றது. அதே போன்று பரமாத்மா - கடவுள் அவ் இயற்கையை சார்ந்திருப்பது போன்ற ஒரு உணர்வையே ஏற்படுத்தும். இது ஜீவர்களின அறியாமையையே காட்டும. ஆகவே இயற்கையோடு நட்பு வைத்துக் கொளளும ஜீவன் பந்த பாசங்களுக்கு அடிமையாகின்றான். அந்த இயற்கையிலிருந்து தனனை முழுவதுமாக விடுவித்துக் கொளளும் போதுதான் அவன உண்மையான விடுதலையைப் பெறுகின்றான்.)

(தொடரும்)



# கோபுரக் கட்டடக்கலை

திரு. தங்க. சங்கரபாண்டியன் - சென்னை.

நம் இந்திய நாடு புராதன நாடு மட்டுமல்ல; புனிதமான நாடும் கூட. நம் நாட்டின் பெருமைகளை எடுத்துரைக்கும் வகையில் பல கலைச்செல்வம் இருக்கின்றன. அவற்றுள் கோபுரக் கட்டடக்கலைச் செல்வங்கள் முதலிடத்தைப் பெற்றுள்ளன.

கோபுரக் கட்டட அமைப்பை மூன்று வகைகளாகப் பிரித்துக் கூறுகிறது சிற்ப சாத்திரம். சதுரமும், நீண்ட சதுரமும் வடிவமுடைய கோபுரம் நாகரம் பாணியாகவும், எட்டுப்பட்டம் வடிவமுள்ள கோபுரம் திராவிடபாணியாகவும், வட்டம், நீண்ட வட்டம், கஜப்ருஷ்டம் வடிவுடைய கோபுரம் வேசரபாணியாகவும் சிற்ப சாத்திரம் பகர்கிறது. நாகரம், திராவிடம், வேசரம் அமைப்புடைய கோபுரங்கள் நம் இந்திய நாட்டில் பரவிக் கிடக்கின்றன.

பல்லவ, சோழ, பாண்டிய, நாயக்க மன்னர்கள் தமிழகத்தை ஆட்சி செய்துள்ளார்கள். கோபுரக் கட்டடக் கலையில் தமக்கென்று தனி பாணிகளை ஏற்படுத்தியுள்ளார்கள். அதனைப் பற்றிய விவரங்களை இங்குக் காண்போம்.

## நாயக்கர்களின் கோபுரக்கலை
(A.D. 1350-1565)

பாண்டிய பரம்பரையின் ஆதிக்க வீழ்ச்சிக்குப் பிறகு நாயக்கர்களது ஆதிக்கம் வலுவடையத் தொடங்கியது. இவர்கள் கோபுரக் கட்டடக் கலையில் அதிக நாட்டம் காட்டினார்கள்.

கர்ப்பக்கிரஹத்திலும், விமானத்திலும், கோபுரத்திலும், தனிக் கலைச்சிறப்பைச் செய்து காட்டியிருப்பதைக் காட்டிலும் மண்டப அலங்காரங்களில் உன்னதக் கலைச் செல்வங்களைப் படைத்துள்ளனர். எடுத்துக் காட்டாக, வேலூர் - (A.D. 1600) ஸ்ரீரங்கம் - (A.D. 1500) திருவண்ணாமலை - (A.D. 1600) தென்காசி - (A.D. 1650) போன்ற இவ்விடங்களில் கோயில் மண்டபக் கட்டடக்கலை தனிச் சிறப்புப் பெற்றுள்ளது.

குன்றக்குடி, திருப்பத்தூர், பிள்ளையார்பட்டி, இரண்யூர், தேவகோட்டை, கண்டதேவி, திருமயம், நேமம், கீழச்சீவல் பட்டி, காரைக்குடி, கோட்டையூர், திருவாடானை, வைரவன் பட்டி, மாத்தூர், தீர்தாணடதானம் போன்ற பல இடங்களில் உள்ள கல்திருப்பணிகள் கோபுரக் கட்டடக்கலைச் சிறப்பைப் பறைசாற்றுகின்றன.

மேற்கண்ட இடங்களில் உள்ள கல்திருப்பணிகளின பாணி, மதுரை பாணியையும், நாயக்கர் பாணியையும் ஒத்திருக்கிறது.

பழம்பெரும் திருத்தலங்களில் உள்ள கோயில் கோபுரங்களைப் பழுதுபார்க்கும் பணி செவ்வையாகச் செய்து முடிக்கப்பட்டுள்ளது. அவற்றுள் சில வருமாறு:-

சிதம்பரம் - நடராசர் பெரிய கோயில் கோபுரம், வைத்தீஸ்வரன் கோயில் கோபுரம், திருவானைக்காவல் ஜம்புகேஸ்வரர் கோயில் கோபுரம், ஸ்ரீரங்கம் - ரங்கநாதசாமி கோயில் கோபுரம், திருவண்ணாமலை - அருணாசல ஈஸ்வரர் கோயில் கோபுரம், திருஉத்தரசகோசமங்கை - நடராசர் கோயில் கோபுரம் என்பன போன்றவையாகும்.

## பாண்டியர்களின் கோபுரக் கட்டடக்கலை

கோபுரக் கட்டடக்கலை



ஸ்ரீபிரகதீஸ்வரர் கோயில் - தஞ்சாவூர்.

யில் சோழர்களைக் காட்டிலும், மேலும் நுட்பமான வேலைப் பாடுகளைப் புகுத்தி அழகு ஊட்டியும், நீண்ட அகலமான பிராகாரங்களைக் கோயிலைச் சுற்றிலும் அமைத்து அரண் போல் சுவர் எழுப்பி (திருமதில்சுவர்) ஒவ்வொரு பிராகாரச் சுவர் வாயிலிலும் கோபுரங்களை அமைத்தார்கள் பாண்டிய மன்னர்கள்.

கோபுரங்களிலும், விமானங்களிலும் நுட்பமான வேலைப் பாடுகள் செய்யப்பட்டுள்ளன. கோபுரத்தின் அடிப்பகுதி கருங்கல் திருப்பணியாகவும் அதற்கு மேல் செங்கல் திருப்பணியாகவும் கட்டி முடித்திருக்கிறார்கள். இதற்கு 'மிஸ்ரம்' என்று பெயர்.

மதுரை - மீனாட்சியம்மன் கோயில் கோபுரம், திருவானைக்காவல் - ஜம்புகேஸ்வரர் கோயில் கோபுரம், ஸ்ரீவில்லிப்புத்தூர் - ஆண்டாள் கோயில் கோபுரம் இன்னும் பல கோயில் கோபுரங்கள் பாண்டிய பரம்பரையின் கோயில் கோபுரக் கட்டடக்கலைச் சிறப்பைப் பாருக்குப் பறைசாற்றுகின்றன.


மகாபலிபுரம் கடற்கரைக் கோயில்

## பல்லவர்களின் கோபுர அமைப்பு

பல்லவர்கள் கற்பாறைகளைக் குடைந்து குகைக்கோயில்களை அமைத்தனர். தனிக் கற்பாறைகளைச் செதுக்கி, ரதங்கள் அமைப்பில் கற்கோயில்களை அமைத்தனர். கற்களை இணைத்துக் கட்டுக்கோயில்களை அமைத்தனர். கோயில் கோபுரக் கட்டடக்கலையில் அரிய-பெரிய சாதனைகளைச் செய்து காட்டியவர்கள் பல்லவர்கள்.


திருஅருணாசலேஸ்வரர் கோயில் - திருவண்ணாமலை.

அஜந்தா, எல்லோரா, மகாபலிபுரம், காஞ்சிபுரம் இவ்விடங்களில் உள்ள சிற்ப, கோயில் கோபுரங்கள் பல்லவ சாம்ராச்சியத்திற்குப் பெருமை அளிக்கின்றன. அவைகளின் விவரங்கள் வருமாறு: அஜந்தா - எல்லோரா - கைலாசநாதர் கோயில் கோபுரம் (A.D. 8 ஆம் நூற்றூண்டு) மகாபலிபுரம் - கடற்கரைக் கோயில் கோபுரம் (A.D. 700). பஞ்சரதங்கள் (A.D. 650) காஞ்சிபுரம் - கைலாசநாதர்கோயில் கோபுரம் (A.D. 700) வைகுண்டப்பெருமாள்கோயில் கோபுரம் (A.D. 700) முதலானவைகள் ஆகும்.

## சோழர்களின் கோபுரக்கட்டடக்கலை

புதுக்கோட்டையின் சுற்றுப்புறங்களில் உள்ள சிறு கோயில்கள் சோழர் பரம்பரையின் ஆரம்ப காலத்தில் அமைக்கப்பட்டவை.

திருக்கட்டளை - சுந்தரேசுவரர் கோயில் கோபுரம், நார்த்தாமலை - விஜயாலயன் கோயில் கோபுரம், கொடும்பாளூர - மூவர் கோபுரம் ஆகிய இவை அனைத்தும் 9ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டவையாகும்.

ஸ்ரீநிவாஸநல்லூர் குரங்குநாதசாமி கோயில் கோபுரம் விஜயாலயன் சோழன் காலத்தில் அமைக்கப்பட்டது. விண்ணைத் தொட்டு நிற்கும் நிலையில் கோபுரக கட்டடககலை சிகரததை எட்டிப பிடிததாறபோல சோழ ராசசியததின மாபெருமை வெற்றிச சினனமாகவே இக கோபுரததைக கட்டிமுடிததுள ளான ராஜராஜசோழன. சிகரம உட்பட கருஙகல திருபபணியாகும. இது பதிமூனறு மாடங களை உடையது. ராஜ ராஜசோழன், கர்ப்பக்கிருஹததில கால புறவாய் விஸ்தாரம் அதிகம் கொண்டு அதே அமைப்பில மற்


ஸ்ரீ ஜம்புகேஸ்வரர்கோயில்
திருவானைக்கா.

றொரு அடுக்கையும் (உபக்ரீவம்) அமைத்து அதன்மேல் 13 அடுக்குகளையும் கொண்டதான (பிரமிட்) அமைப்பில் விமானம் அமைத்துள்ளான். ஸ்தூபி உட்பட கருங்கல் திருப்பணியாகும்.

ஸ்ரீமீனாட்சிஅம்மன் கோயில் - மதுரை.

சோழமன்னர் பரம்பரையில் எழுப்பப்பட்ட கற்கோயில் கோபுரத்திருப்பணிகளில், கர்ப்பககிருஹம் விமானத்திற்கு முக்கியத்துவம் கொடுத்தாற் போல் விமானத்தின் உயரத்தையும் கூட்டியிருக்கிறார்கள். இதனையடுத்து, திருப்புவனம் - (A.D. 1025) கங்கைகொண்டசோழபுரம் - (A.D. 1025) தாராசுரம் - (A.D. 1350) திருவாரூர் - (A.D 1600) ஆகிய ஊர்களிலுள்ள கோயில் கோபுரங்கள் சோழபரம்பரையின் கட்டடக்கலையின் சிறப்பை உலகிற்குப் பறைசாற்றுவனவாகும்.



*அகில புவந ஜன்ம ஸ்தேம*
*பங்காதிலீலே*
*விநத விவித பூத வ்ராத*
*ரக்ஷைகதீக்ஷே*
*ச்ருதி ஸிரஸி விதீப்தே*
*ப்ரம்மணி ஸ்ரீநிவாஸே*
*பவது மம பரஸ்மின்*
*சேமுஷீ பக்திரூபா*

ஸ்ரீ வ்யாஸ மகரிஷியினால் தொகுக்கப்பட்ட நூல் 'பிரம்ம சூத்திரம்' என்பது. இதுவே சாரீரக மீமாம்சை அல்லது உத்தர மீமாம்சை என்று சொல்லப்படும். வைதிக மதத்தைச் சார்ந்த பல மஹான்களால் விரிவுரை வழங்கப்பட்ட இந்த நூலுக்கு ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய அடிப்படையில் ராமாநுஜரால் அளிக்கப்பட்ட விரிவுரை லும் மிகப் பெரியவன் ஸ்ரீய: பதி - திருமகள் மணவாளன் - ஸ்ரீநிவாச சப்தத்தால் தெளிவாக சொல்லப்பட்டவன் - இந்த பகவானுடைய திருவடிகளில் பூரணமான பக்தி ஏற்பட வேண்டும்" - என்ற இஷ்ட தேவதா பிரார்த்தனையுடன் தொடங்கும் ஸ்ரீபாஷ்ய ஸ்லோகத்தை விளக்கி மேலே ராமாநுஜருடைய சரித்திரத்தைக் கொண்டு திருவேங்கடமுடையானுடைய பெருமையை அனுபவிக்கலாம்.

ஸ்ரீராமாயணம் மற்றும் மஹாபாரதம் என்ற இதிஹாஸங்கள் இரண்டும் பிரசித்தமாக இருக்க ராமாநுஜர் ஒரு குருவையடைந்து மஹாபாரதத்தை பாடம் கேட்டார் என்பதற்குச் யண அர்த்தங்களைக் கேட்டார். ஆனால் இது நடைபெற்றது திருமலை அடிவாரத்திலேயே என்றும், திருமலைநம்பிகள் தினமும் காலையில் திருவேங்கடமுடையான் கைங்கர்யங்களை முடித்தப் பிறகு மத்தியான வேளையில் மலை அடிவாரத்தில் ராமாநுஜருக்கு ராமாயண அர்த்தங்களை உபதேசம் செய்து, மீண்டும் மாலை திருமலைக்குச் சென்று தனது கைங்கர்யத்தை தொடர்ந்ததாக தெரிவிக்கப்படுகிறது. இதுபோன்ற நிகழ்ச்சியால் பகல் வேளை திருவேங்கடமுடையான் கைங்கர்யத்தை இழந்த திருமலை நம்பிக்கும் மற்றும் ராமாநுஜருக்கும் மலையடிவாரத்தில் காலக்ஷேபம் நடைபெறும் இடத்தில்

# திருவேங்கடமுடையானும் ராமாநுஜரும்

திரு. கே.ஏ. பார்த்தசாரதி - சென்னை.

"ஸ்ரீபாஷ்யம்" என்று பெயர் பெற்றது.

அந்த நூலின் தொடக்கத்தில் இஷ்டதேவதா வந்தனமாக அமைந்த மங்கள ஸ்லோகமே மேலே தெரிவிக்கப்பட்ட ஸ்லோகம்.

இந்த ஸ்லோகத்தின் சாரமான பொருள்: "எம்பெருமான் சகல லோகங்களையும் படைத்து அளித்து, துடைப்பதையே லீலையாகக் கொண்டவன். தன்னை வணங்கின வெவ்வேறு பட்ட பிராணி சமூகத்திற்கும் முக்தி அளிப்பதான ரக்ஷணத்தை செய்வதையே விரதமாகக் கொண்டவன். வேதாந்த விழுப்பொருளாகப் பிரகாசிப்பவன். ஸ்வரூபத்தாலும் திருக்குணங்களா சரித்திரச்சான்று கிடையாது. அதே சமயம் பெரிய திருமலை நம்பி என்ற ஆசார்யனை அடைந்து ஸ்ரீராமாயண அர்த்தங்களை உபதேசம் பெற்றார் என்று சரித்திரம் கூறுகிறது.

திருவேங்கடமுடையான் விஷயமாக அமைந்த புராதனமான நூல் "திருமலை ஒழுகு" என்பது. ராமாநுசர் மூன்று முறை திருமலைக்கு எழுந்தருளினார் என்று இதில் காணப்படுகிறது. அதில் முதல் முறையாக திருவேங்கடவன் கைங்கர்யத்தில் ஈடுபட்டிருந்த பெரிய திருமலைநம்பி என்ற ஆசார்யனிடம் ராமாநுஜர் ஸ்ரீராமாயண அர்த்தங்களை பூரணமாக கிரகித்தார் என்பது ஒரு தகவல். ராமாநுஜர் ஒருவருடகாலம் ஸ்ரீராமா ஒரு திந்த்திரிணி மரத்தடியில் அமைந்துள்ள குண்டுக் கல்லில் தனது திருவடிகளைப் பதித்து அவர்களுக்குக் காட்சியளித்ததாகத் தெரிவிக்கப்படுகிறது. இந்த முதல் யாத்திரையில் திருவேங்கடமுடையானுடைய கடாக்ஷத்திற்கு பாத்திரமானாரே ஒழிய நேராக மலை ஏறிச்சென்று திருவேங்கடமுடையானை சேவித்ததாக சரித்திரம் இல்லை. ராமாயண சாரார்த்தங்களை கிரகித்தார் என்பது மட்டுமே.

திருவரங்கத்தமுதனார் இந்த விருத்தாந்தத்தை தமது நூற்றந்தாதியில் அனுபவித்த பிரகாரம் அனுபவிககத்தக்கது.

*"படிகொண்டகீர்த்தி ராமாயணம்*
*என்னும் பத்தி வெள்ளம்*
*குடிகொண்டகோயில் இராமாநுசன்"*

என்பது விசேஷமாக கொள்ளப்பட்டது.

ராமாநுஜர் இரண்டாவது முறையாக திருமலைக்கு எழுந்தருளியது பற்றி "திருமலை ஒழுகு" என்ற நூலில் காணப்படும் விவரம் மேலே காணலாம்.

ஸ்ரீவேங்கடேச மஹாத்மியம் - ப்ராம்ம புராணத்தில் காணப்படும் கதாபாகம் - திருவேங்கடமுடையானை இஷ்டதெய்வமாகக் கொண்ட தொண்டைமான் சக்ரவர்த்தி என்பவருக்கு அவருடைய சத்ருக்களால் அபாயம் ஏற்பட, அந்த ராஜாவினுடைய யுத்தத்திற்கு சகாயமாக தமக்கே அஸாதாரணமான ஆயுதங்களான சங்க சக்கரங்களைக் கொடுத்து உதவினார் திருவேங்கடமுடையான். அதே காரணமாக தமது அர்ச்சாமூர்த்தியில் சங்கு சக்கரம் இல்லாத நிலையில் சிலகாலம் காட்சியளித்து வந்ததாக தெரிகிறது. ராமாநுஜர் காலத்திலேயே சங்கு சக்கரங்கள் மீண்டும் திருவேங்கடமுடையானுக்கு சமர்ப்பிக்கப்பட்டதாக சரித்திரம். ராமாநுஜர் காலத்தில்தான் ஏன் இந்த நிகழ்ச்சி ஏற்படவேண்டும் என்பதற்கு சமாதானம். அந்தக் காலத்தில் சைவப் பற்றுடையவனான அரசன், கோயில் அர்ச்சகர்களைத் துன்புறுத்தி வந்ததாகவும் அதனால் வேங்கடவனுக்கு பூஜைகள் சரிவர நடைபெறாமல் தடைப்பட்டது என்பதும், சைவர்கள் திருவேங்கடமுடையானைத் தங்களது இஷ்ட தெய்வமான சுப்ரமண்யர் என்று பிரசாரம் செய்யத்தொடங்கினார் என்பதும், அப்பொழுது ஏற்பட்ட சைவ, வைணவ வாதங்களின் பங்கு கொண்ட ராமாநுஜர் புதிதாக சங்கு சக்கரங்களை திருவேங்கடவனுக்கு சமர்ப்பித்தார் என்பதும் கூறப்படுகின்றன.

இந்த நிகழ்ச்சி "ஸ்ரீவேங்கடேச இதிஹாஸ மாலா" என்ற வடமொழி நூலில் மிக விஸ்தாரமாக விளக்கப்பட்டிருக்கிறது. திருமலையின் மீது கோயில் கொண்டிருக்கும் திருமால் விக்கிரகம் சைவர்களால் சுப்ரமண்யர், மற்றும் துர்க்கை, சக்தி என்று பலவாறாக சுமார் பதினான்கு காரணங்களைக் காட்டி தங்களது வாதத்தை ஸ்தாபிக்க முயன்றதாகவும், அவை எல்லாம் தகுந்த காரணங்களை காட்டி நிராகரிக்கப்பட்டன என்றும் எடுத்துக் காட்டி விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறது. (History of Tirupati Vol. II p. 197-204)

ராமாநுஜர் தனது சிஷ்யரான யாதவராயன் என்பவருடைய பிரார்த்தனைக்கு இணங்கி மூன்றும் முறையாக திருமலைக்கு எழுந்தருளினார். திருப்பதியில் கோவிந்தராஜனுக்குக் கோயில் நிர்மாணித்து மற்றும் பல கோயில் சீர்திருத்தங்களையும் செய்து அவற்றின் நிர்வாகத்திற்காக தாமே பெரிய ஜீயர் மடத்தையும் ஸ்தாபித்து, தாமே முதல் மடாதிபதியாக இருந்து நிர்வகித்து காட்டினார். தனக்கு சிஷ்யரான அநந்தாழ்வான் என்பவரிடம் தம்மைப் போல் ஒரு விக்கிரகத்தை தயாரிக்கச் சொல்லி அந்த விக்கிரகத்தை கட்டி அணைத்து தமது ஸ்பர்சத்தையும் உண்டாக்கி அந்த விக்கிரகத்தை திருவேங்கடவன் முன்னிலையில் பிரதிஷ்டை செய்தருளினார். மற்றைய ஆழ்வார் ஆசார்யர்கள் ஒருவருக்கும் இல்லாத தனிப்பெருமை ராமாநுஜருக்கு திருவேங்கடவன் முன்னால் அமைந்திருக்கும் சந்நிதி என்பது பெருமைக்குரிய விஷயம். அநந்தாழ்வான் பரம்பரையில் தோன்றியவர்களே அன்று முதல் இன்றுவரை அந்த சந்நிதி கைங்கர்யத்தில் ஈடுபட்டு வருகின்றனர். இந்த ராமாநுஜர் விக்கிரகத்திற்கு சம்பிரதாயத்தில் "தாம் உகந்த திருமேனி" என்று பெயர் (ராமாநுஜர் திருமனத்தால் செய்யப்பட்டு அவர் ஆலிங்கனம் பெற்ற பின் பிரதிஷ்டை செய்யப்பட்டது.)

திருமலை கோயிலுக்கு எதிரில் சிறிய திருவடி (ஆஞ்ஜநேயர்) கோயில் பக்கமாக தமது மடத்தையும் ஸ்தாப

## புதிய ஆர்ஜித சேவைகள்

| | கட்டணம் |
|---|---|
| அபிதேயக அபிஷேகம் | ரூ. 2000/- |
| பத்மாவதி பரிணயம் (அனுமதி 5 நபர்கள்) | ரூ. 5000/- |

## விண்ணப்பம்

'ஸப்தகிரி' இதழுக்குக் கதை, கட்டுரைகள்; துணுக்குகள் அனுப்புமாறு எழுத்தாளர் பெருமக்களை மேலாண்மை கேட்டுக்கொள்கிறது. பிரசுரிக்கப்படும் கதை, கட்டுரைகளுக்கு மட்டுமே சன்மானத்தொகை வழங்கப்படும்.

ஆசிரியர்.

னம் செய்து தனது ஆராதன தெய்வமான சக்ரவர்த்தி திரு மகனையும் மடத்தில் பிரதிஷ்டை செய்தார். சிலகாலம் ராமானுஜர் திருவேங்கடமுடையானுக்கு பல கைங்கர்யங்களையும் செய்து வந்தார். தன்னுடைய ஸ்தானத்தில் சடகோபஜீயர் என்பவரையும் மற்றும் நான்கு ஏகாங்கிகளையும் நியமனம் செய்து அவர்கள் மூலம் தொடர்ந்து கைங்கர்யங்கள் நடைபெறுவதற்கானத் திட்டங்களை அமைத்துக் கொடுத்து திருவேங்கடமுடையானிடம் விடைபெற்று மீண்டும் திருவரங்கத்தையடைந்தார்.

ராமானுஜர் பற்றி மேலே சொல்லப்பட்ட விஷயங்கள் எல்லாம் "ஸ்ரீவேங்கடாசல இதிஹாஸமாலா" என்ற வடமொழி நூல் மற்றும் "திருமலைஒழுகு" என்ற நூலிலிருந்தும் சேகரித்து தொகுத்து அளிக்கப்பட்டது.

கன்யா ஸ்ரவண ஸஞ்ஜாதம்
சேஷாசல நிவாஸினம்
சர்வேஷாம் ப்ரதமாசார்யம்
ஸ்ரீநிவாசம் அஹம் பஜே

என்று முதலில் ஸ்ரீவைஷ்ணவ சமூகத்தின் பிரதம ஆசார்யரான திருவேங்கடமுடையான் திருவடிகளில் மற்றும் அவருடைய சந்நிதியில் கோயில் கொண்டிருக்கும் ராமானுஜர் திருவடிகளிலும் பிரணமங்களை சமர்ப்பித்து,

லக்ஷ்மீநாத சமாரம்பாம்
நாதயாமத்யமாம்
அஸ்மதாசார்ய பர்யந்தாம்
வந்தே குருபரம்பராம்

என்று வணக்கத்துடன் பூர்த்தி செய்கிறேன்.



திருப்பாவையில் ஆண்டாள் "தாழாதே - சாரங்கம் உதைத்த சரமழைபோல் வாழ உலகினில் பெய்திடாய்" என வேண்டுகிறாள். மஹாவிஷ்ணுவின் சார்ங்கம் எனும் வில் தனது கூரிய அம்புகளின் மழையால் அசுரர்களையும் அரக்கர்களையும் அழிக்கின்றது. அதே சார்ங்கம் திருமங்கை மன்னனாக, கலியனாக, பரகாலனாக அவதரித்துத் தனது பாமழையால் உலகினை வாழ வைத்த ஆச்சரியம்தான் என்னே!

குமுத மலரினைக் கொய்து நின்ற குமுதவல்லியின் மேல் வைத்த மோஹத்தினால், ததீயர்களுக்குச் செய்த ஆராதனம், குமுதமலரின் மென்மையையும்

# தாழாத சார்ங்கம்

'அனந்தம்'

தாமரை இதழ் போன்று படர்ந்து மிளிரும் தன்மையையும் கொண்ட கண்ணழகினைப் படைத்த கொண்டல் வண்ணனிடம் அழிவற்ற காதலை உண்டாக்கியது நீலனிடம்.

"பஞ்சஸம்ஸ்காரம் செய்து கொண்ட மஹனீயனையே மணாளனாகக் கொள்வேன்" என்று தனது திடமான நிச்சயத்தினைத் தகப்பனாரிடம் கூறுகின்றாள் குமுதவல்லி. இதனை அறிந்த நீலன் திருநறையூருக்குத் திரும்பி அங்கு ப்ரகாசிக்கும் பெருமாளிடம் வேண்டி பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பெறுகிறார். தான் பெறும் ஸம்ஸ்காரம் ஸ்த்ரீ ரத்தனத்தைப் பெற மாத்திரம் என எண்ணினாரே தவிர, இதே, தன்னை அகில புவன ரத்தனம், ஸ்ரீமதானந்த ரத்னம் என்று எல்லோராலும் போற்றப்படுகிற எம்பெருமானையே தனக்குக் கணவனாகக் காட்டிக் கொடுக்கும் என்று அறிந்தார் இல்லை.

மனிதனாகப் பிறந்தவன் ஸஜ்ஜன ஸங்கத்தினால் சிரேயஸ்ஸினை அடைகிறான் என்பது ஓர் ஒப்பற்ற உண்மை.

'ஒரு வருடம் நீர் ததீயர்களுக்கு ஆராதனை செய்து அவர் போனகசேஷத்தையும் ஸ்ரீபாததீர்த்தத்தினையும் ஸ்வீகரித்தால்தான் உம்மை நான் ஏற்பேன்' என்ற குமுதவல்லியின் மற்றுமொரு கட்டளையை சிரமேற்கொண்டு அவ்வாறே செய்வதாக வாக்களித்து அவளைப் பெறுகிறார் மனைவியாக. கொடுத்தவாக்கினைக் காப்பாற்றும் பொருட்டு தினந்தோறும் 1008 ஸ்ரீவைஷ்ணவர்களை அழைத்து உபசரித்து அமுது செய்வித்த செய்கையே அவரது முகாரவிந்தத்தில் இருந்து ஆயிரத்திற்கும் மேற்பட்ட பாசுரங்களை தாழாதே சார்ங்கம் உதைத்த சாமழை போல் வெளிக்கொணர்ந்தது என்னலாமோ!

ஆனாத செல்வத்து அரம்பையர்கள்
தற்சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும்
யான் வேண்டேன்
தேனார் பூஞ்சோலைத்
திருவேங்கடச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும்
விதியுடையேனாவேனே

என பெருமாள் திருமொழியில் குலசாகராழ்வார் இயம்பியது போல, இவரும் 'ராஜ்ய ஸுகம்' அநித்யம் என்பதை மிகவும் அழகாக வர்ணிக்கிறார். மேலும், 'அனன்ய கதி சரணம் அஹம் பரபத்யே' எனும் தத்வத்தினைக் கண்ணபுரத்துப் பாசுரத்தில் பாடுவதைக் கேட்போம்.

பெற்றாரும் சுற்றமும் என்று
இவைபேணேன் நான்
மற்றாரும் பற்றிலேன் ஆதலால்
நின்னடைந்தேன்
உற்றானென்று உள்ளத்து
வைத்து அருள்செய்கண்டாய்
கற்றார் சேர் கண்ணபுரத்துறை
அம்மானே!

எவ்வளவு ஜன்மங்களில் எத்தனை எத்தனை தாய் தந்தையர்களோ? அளவிறந்த சுற்றத்தாருடன் வாழ்ந்து சலித்த நான் இவர்களைச் சிறிதும் பேணேன். உன்னையன்றி வேறு ஒருவரும் எனக்கு இல்லை. நீ என்னை "இவன் நம்மை அடைக்கலமாகப் பற்றிய பக்தன்" என உள்ளத்துள் வைத்து அருள் செய்தல் வேண்டும் என வேண்டுகிறார் கண்ணபுரத்தம்மானிடம்.

வால்மீகியால் வினவப்படுகிறார் நாரதர் "கோன்வஸ்மின் ஸாம்ப்ரதம் லோகே குணவாந் கஸ்ச வீர்யவான்" என்று இன்று பூலோகத்தில் வஸிக்கும் குணவான், வீர்யவான் யார்? என வினவப்பட்ட போது, தினமணி வம்ச திலக லாவண்யனான இராமபிரானை நினைத்து இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த ரகுமஹாராஜனின் வம்சத்தில் உதித்த தாசரதியையே குணவான் என்கிறார்.

ஏனெனில் குணம் என்பது எல்லோரிடமும் அன்பாகப் பழகுவதே. ஏழை பணக்காரன் என்ற வித்தியாஸம் இல்லாமல்.

உயர்குடிபபிறந்தவன் தாழ்ந்த குடியனன் என மாறுபாடு இல்லாமல் எலலோரையும் தன்னவராகக கருதும் இராமபிரானின் குணமே சிறந்த குணம் எனப் பரகாலனும் வர்ணிக்கிளுர்.

ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது
இரங்கி மற்றவர்க்கு
இன்னருள் சுரந்து
மாழைமான் மடநோக்கி உன்தோழி
உம்பி எம்பி என்று ஒழிந்திலை
உகந்து
தோழன் நீ எனக்கு இங்கொழி என்ற
சொற்கள் வந்து அடியேன்
மனந்திருந்திட
ஆழிவண்ண நின்னடி இணை
அடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்-
தம்மானே.

வனவாஸத்திற்காக வரும் இராமபிரானை எதிர்கொண்டழைக்கினுன் வேடர்களின் தலைவனான குகன். ஸூரய குல நாயகனான இராமன்

दैवतपारमार्थ्यंत दाशरथि भाव
दिनकरकुलकमल दिवाकर

எனறு தேசிகனால ரகுவீரகத்யததில் பாடப்பட்ட வைகுண்டநாதன

अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन् |
प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया ||

எனறு தன்னை அறிவித்துக் கொள்ளும் கீதா நாயகன் ஒரு சிறுகாட்டில் விளங்கும் சாதாரண வேடர்களின் தலைவனான குகனைக் கண்டு "மாழைமான் மடநோக்கி உன்தோழி", (மான் போன்ற கண்களை உடைய ஸீதை உனது தோழி) என்று கூற வேண்டுமேயானால் அவனது ஹ்ருதய எண்ணங்கள் எவ்வளவு உத்தமமானவை?

'குகா! நீ எனது தோழன்,' என்று கூறப்புறப்பட்ட பெருமாள் ராகவன், "இல்லை! இல்லை! நீ எனது சகோதரன்' எனக்கூறி, குகனுடன் ஐவரானோம் என்கிறுர். காணத்தான் முடியுமா இக்குணத்தினை வேறு யாரிடமாவது. திருவரங்கத்தம்மானே! ஆழி

✽ ✽ ✽ ✽ ✽ ✽ ✽



✽ ✽ ✽ ✽ ✽ ✽ ✽

வண்ணனே! நின் திருவடிகளே சரணம் என்கிறுர் பரகாலன்.

இவரது பாசுரங்களைக் கேட்டு, அமந்தானந்தம் பொங்க தன்னையே மறந்த பெருமாள் "மடலை இங்கே கட்டி மதிளை அங்கே கட்டலர் காதோ" என்றுராம். திருவரங்கத்தானே இவ்வாறு ஏங்க வேண்டுமேயாகில் நாம் என்றுதான் சுவைப்பது இப்பாசுரங்களை, அவற்றின் ஆழ்ந்த கருத்துக்களை?

அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது எனும் பழமொழிக்கு ஏற்ப, 84 லக்ஷம் யோனிகளில் பிறந்து 'கேனாபி புண்ய விசேஷேண மானுஷ்யம்' அடைந்த நாம் திருமங்கை ஆழ்வாரின் பாசுரங்களை அவச்யம் சுவைக்க வேணடும். சுவைத்ததால் பெற்ற அறிவினை நமது வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டும். நம் குலத்தாருக்கு அதனையே வைப்பு நிதியாக அளிக்க வேண்டும்.

கல்லினாலும் மண்ணினாலும் கட்டப்பட்ட வீடு எங்கே? மோக்ஷமெனும் வீடு எங்கே? தங்கத்தால் முத்துக்களால் மாணிக்கத்தால் ஆன அணிகலன்கள் எங்கே? 'பூஷணம் பூஷணாம்' என்று போற்றப்படுபவன் நாராயணன்தான்.

தந்தையே தாயே சுற்றமே மக்களே என்று பற்றி நின்று நொந்து பழி அடையும் பந்தம் நிறைந்த வாழ்க்கை போகமெல்லாம் போது போதும். அந்தமாய் ஆதியாய் ஆதிக்கும் ஆதியாய் அனாதியாய் விளங்கும் மாயனான பெருமாளின் நாமம் பாடி, அவனது அடியார் திருவடிகளில் முடிவணங்கி ஒப்பற்ற ஆனந்தம் அடைவோம் வாரீர்! வாரீர்!



Edited and published on behalf of T.T. Devasthanams by K. Subba Rao, M.A. and Printed at T.T.D. Press by M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

